# சுதந்திர மணி வாசகம்

## நான்காம் புத்தகம்

ஆக்கியோர் :

**வித்துவான் க. முருகேசன்,**

தலைமைத் தமிழாசிரியர்,

அர்ச். மரியன்னை உயர்நிலைப்பள்ளி, திண்டுக்கல்




பழனி & கோ பதிப்பகம்

தெப்பக்குளம் : : திருச்சிராப்பள்ளி

 [விலை அணா 8

# முகவுரை

'சுதந்திர மணி வாசகம்' என்னும் பெயர் புனைந்து வெளிவரும் இப்புத்தகங்கள் வகுப்பு அநுபவமும், புலமையும் உடைய ஆசிரியரால் தொகுக்கப் பெற்றவை. பொருள்கள் கால நிலையைத் தழுவியும், வகுப்பிற் கேற்றவாறும், சுருங்கச் சொல்லல், நன்மொழி புணர்த்தல், நயம்பட வுரைத்தல் என்ற அமைப்புக்களைத் தழுவியும் சேர்க்கப் பெற்றுள. முரண்பாடான கொள்கைகளும், காலத்திற்குப் பொருந்தாதனவும், வாழ்க்கையில் பயன் படாதனவும் இப்புத்தகங்களில் இடம் பெறவில்லை. வாசகங்கள் முன் வகுப்போடு தொடர்ச்சியுள்ள முறையில் (Concentric System) படிப்படியாக வாசிக்கும் பயிற்சியைக் கொடுப்பனவாகவும், மொழிப் பயிற்சியில் தேர்ச்சியை யளிப்பனவாகவும், கருத்துக்களை வெளியிடுவனவாகவும் யாக்கப்பட்டுள. இப்புத்தகங்கள் யாவராலும் ஏற்கப் பெற்று சிறுவர் சிறுமியர் பயன்பெற வேண்டுமென்பதே எங்கள் அவா.

பதிப்பகத்தார்

# பொருளடக்கம்

# சுதந்திர மணி வாசகம்

## நான்காம் புத்தகம்



## 1. ஜெயக் கொடி

கொடி உயர்த்திடுவோம்—ஜெயக்
கொடி உயர்த்திடுவோம்.
கடமை காத்திடுவோம்—தியாகக்
கனல் குளித்திடுவோம். (கொடி)

ஒற்றுமையாய்ப் பணிவோம்—தாயின்
ஓங்கும் ஜெயக்கொடியை
வெற்றிகள் கூறிடுவோம்—சுற்றி
வீர நடம்புரிவோம். (கொடி)

பார்நிலம் உள்ளமட்டும்—ஜெய
பாரதம் உள்ளமட்டும்,
ஆருயிர் உள்ளமட்டும்—இதன்
அறத்தைக் காத்திடுவோம். (கொடி)

நல்லதை ஆதரிப்போம்—தீமை
நலியப் போர்புரிவோம்.
எல்லாரும் இன்புறவே—மணிக்கொடி
ஏற்றிப் பணிந்திடுவோம். (கொடி)

—யோகி சுத்தானந்த பாரதி

## 2. நான்காம் வகுப்பு

இப்போது நீங்கள் நான்காவது வகுப்பிற்கு மாறி யிருக்கிறீர்கள். இப்போது புதுப் புத்தகம் வாங்கி யிருக்கிறீர்கள். இது நான்காம் பாடப் புத்தகம். பாடங்களைப் படிக்க வேண்டிய முறைகளைப் பற்றி முதலில் நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும்.

படத்தில் காட்டியுள்ளது போல் புத்தகத்தை இடக் கையால் பற்றி மார்பளவில் உயர்த்திப் பிடித் துக் கொள்ளவேண்டும். கண்ணுக்கு வெகு அருகில் புத்தகத்தைப் பிடித்துக் கொள்வது கூடாது ; வெகு தூரத்தில் பிடித்துக்கொண்டு படிப்பதும் கண்ணுக்குக் கெடுதல்.

வகுப்பில் படிக்கும் போது புத்தகத்தையே பார்த் துக் கொண்டு நிற்கக் கூடாது. ஒரு வாக்கியத்தை மௌனமாகப் பார்க்க வேண்டும்; பிறகு வகுப்பை நோக்கி அதைப் படிக்க வேண்டும். இப்படியாக,

இடையிடையே கண்களுக்கு ஓய்வு கொடுக்க வேண்டும்.

எழுத்துக்களைத் தெளிவாக உச்சரிப்பதும், கேட்பவர்களுக்கு விளங்கும்படி சொற்களைச் சொல்வதும் முறையாகும். நிறுத்தவேண்டிய இடங்களில் அளவாக நிறுத்திப் படிக்க வேண்டும். அப்படிப் படித்தால்-தான் படிப்பவைகளின் கருத்துக்கள் விளக்கமாகத் .தெரியும்.



எங்கெங்கே நிறுத்திப் படிக்க வேண்டும் என்று தெரிவதற்காக ஆங்காங்கு நிறுத்துக் குறிகள் வைக்கப் பட்டிருக்கும். அக் குறிகளைப்பற்றி இப் பாடத்தின் கடைசியில் கூறப்படும்.

கருத்தை நோக்கிக் குரலைத் தாழ்த்தியும், உயர்த்தியும் படிக்கவேண்டும். வியப்பு, அச்சம், வினா, கோபம், மகிழ்ச்சி, துக்கம் முதலிய உணர்ச்சிகள் தோன்றும்படி வாசிப்பதே சிறந்த முறை.

பழக்கத்தில் நாம் பேசுவது போலவே படிக்க வேண்டும். எங்கும் ஒரே குரலில் படிப்பதும், இராகம் போட்டுப் படிப்பதும், வார்த்தைகளை விழுங்குவதும் கூடாது.

மேலே கூறியபடி கவனித்துப் படித்தால், வாசிக்கும் முறையில் நீங்கள் தேர்ந்தவர் ஆவீர்கள்.

## நிறுத்துக் குறிகள்

. இது முற்றுப் புள்ளி. கருத்து முடியும் இடங்களில் வாக்கியத்தின் முடிவில் இக்குறி வைக்கப்படும்.

: இது முக்கால் புள்ளி.

; இது அரைப் புள்ளி.

, இது கால் புள்ளி.

? இது வினாக் குறி அல்லது கேள்விக் குறி.

! இது வியப்புக்குறி அல்லது ஆச்சரியக் குறி.

| | | |
|---|---|---|
| முறைகள் | ஓய்வு | வியப்பு |
| உச்சரிப்பது | இடையிடையே | அச்சம் |
| விளங்கும்படி | கவனித்து | வினா |
| விளக்கமாக | தேர்ந்தவர்கள் | மகிழ்ச்சி |
| ஆங்காங்கு | நோக்கி | துக்கம் |
| மார்பளவு | பழக்கத்தில் | இராகம் |
| அருகில் | மௌனமாக | உயர்த்தி |
| தெளிவாக | பற்றி | தாழ்த்தி |
| வாக்கியம் | தோன்றும்படி | நிறுத்துக்குறி |
| வார்த்தை | விழுங்குவது | |

| | |
|---|---|
| தாழ்வு × உயர்வு | இடக்கை × வலக்கை |
| அருகில் × தூரத்தில் | கெடுதல் × நன்மை |

### பயிற்சி

**வாக்கியம் சொல் எழுத்து**

**புத்தகம்.** இது ஒரு சொல். **பு த் த க ம்**—இவைகள் எழுத்துக்கள். இவ்வெழுத்துக்கள் சேர்ந்து புத்தகம் என்னுஞ் சொல்லாகி ஒரு பொருளை உணர்த்துகின்றன.

ஈ, போ, வா—இவை தனித்தனி எழுத்துக்கள். இவ்வெழுத்துக்கள் தனியே நின்று பொருளைத் தருகின்றன. இவை ஓரெழுத்தால் ஆகிய சொற்கள்.

**நான் ஒரு புத்தகம் வாங்கினேன்.**—இதில் நான்கு சொற்கள் இருக்கின்றன. இச் சொற்கள் சேர்ந்து ஒரு முடிந்த பொருளைத் தருகின்றன. இது ஒரு வாக்கியம். பல சொற்கள் சேர்ந்து நின்று ஒரு முடிந்த கருத்தைத் தெரிவித்தால், அது **வாக்கியம்** எனப்படும்.

**புத்தகத்தைப் பார்த்து**—இதில் கருத்து முடியவில்லை. இது ஒரு வாக்கியம் அன்று.

**1. பின் வருபவைகளில் உள்ள முழு வாக்கியங்களை எடுத்துக் கூறு.**

நான் நான்காவது வகுப்பில் படிக்கிறேன்.
நான்காவது வகுப்பில்
நிறுத்துப் புள்ளிகளைக் கவனித்துப் படி.
நிறுத்துப் புள்ளிகளை
இராகம் போட்டுக் படிக்கக் கூடாது.
இராகம் போட்டு

**2. எங்கெங்கே முற்றுப்புள்ளிகளை வைப்பாய்?**

இது நான்காம் பாடப் புத்தகம் இது ஒரு புதிய புத்தகம் என் மாமா எனக்கு ஒரு புத்தகம் வாங்கித் தந்தார் நீ நன்ருக வாசிக்க வேண்டிய முறைகளைத் தெரிந்துகொள்

## கேள்விகள்

1. புத்தகத்தை எப்படிப் பிடித்துக்கொள்ள வேண்டும்?
2. படிக்க வேண்டிய முறைகளைக் கூறு.
3. நிறுத்துக் குறிகளின் பெயர்களைக் கூறு.




# 3. தமிழ் நாடு

தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா;
அமிழ்தில் இனியதடி பாப்பா—நம்
ஆன்றோர்கள் தேசமடி பாப்பா.

—பாரதியார்

தமிழ்மொழி வழங்கும் நாடு தமிழ் நாடு. தமிழ் நாடு தமிழருடைய நாடு. தமிழ்மொழியைத் தாய் மொழியாக உடையவர் தமிழர் எனப்படுவர். தமிழ்

நாட்டின் குடிகள் தமிழர். தமிழ் நாடு தமிழர் களுக்குத் தாய் நாடு அல்லது தாயகம் ஆகும். தமிழ் நாட்டிற்குத் தமிழகம் என்றும் பெயர் வழங்கும்.

இந்தியாவின் தெற்குக் கோடியில் உள்ளது தமிழகம். இந்தியாவிற்குத் திலகம் போன்றது தமிழ் நாடு. தமிழ் நாடு மிகப் பழமையானது. பல்லாயிரம் ஆண்டுகளுக்குமுன் தமிழ் நாடு மிகவும் பரந்து இருந்தது. பிறகு தமிழ் நிலத்தின் பெரும்பகுதி கடலால் கொள்ளப்பட்டது. இப்போது திருப்பதி மலையிலிருந்து கன்னியாகுமரிவரையில் உள்ள நாடு தமிழ் நாடு ஆகும். திருப்பதிமலைக்கு வடவேங்கடம், அல்லது வடமாலவன் குன்றம் என்ற பெயர் வழங்கும். அம்மலை தமிழ் நாட்டின் வடக்கில் உள்ளது. கன்னியாகுமரி என்பது தெற்குக் கோடியில் கடலை அடுத்துள்ள முனையாகும். தமிழ் நாட்டிற்குத் தெற்கிலும், கிழக்கிலும், மேற்கிலும் கடல் சூழ்ந்திருக் கின்றது. தமிழகத்தின் மேற்கில் ஒரு பகுதி, இப்போது ‘ மலையாள நாடு ’ என்று வழங்குகிறது. மலையாளத்தின் குடிகளுக்கு மலையாளிகள் என்று பெயர்.

முற்காலத்தில் நம் தமிழகம் மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிந்திருந்தது. அவைகளுக்குச் சேர நாடு, சோழ நாடு, பாண்டிய நாடு என்று பெயர். சேரர், சோழர், பாண்டியர் என்ற அரசர்கள் முறையே அந்நாடுகளை ஆண்டுவந்தார்கள். இப்போது அப் பிரிவுகள் வழக்கில் இல்லை ; அம்மன்னர்களும் இல்லை. தமிழகம் பல ஜில்லாக்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. தமிழ் நாடு இந்திய அரசாங்கத்தின் ஒருபகுதி ஆகும்.

தமிழ் நாடு நீர்வளமும், நிலவளமும் உடையது. மேற்குத் தொடர்ச்சி மலைகள், கிழக்குத் தொடர்ச்சி மலைகள் என்பன தமிழ் நாட்டின் மலைகள் ஆகும். காவிரி, தென்பெண்ணை, பாலாறு, வைகை, பொருநை என்பன தமிழகத்திலுள்ள பேராறுகள். பயிர்த் தொழில், வர்த்தகம், கைத்தொழில், கல்வி ஆகிய எல்லாத் துறைகளிலும் தமிழ் நாடு சிறப்புடையது. தமிழர்களாகிய நாம் நம் தாய்கத்தின் பெருமையைக் காக்கவேண்டும்; அறிவும், நாகரிகமும் உடையவர்களாய் ஒற்றுமையுடன் வாழவேண்டும்.

| | | |
|---|---|---|
| தமிழ்நாடு | திலகம் | கடல் |
| தமிழ்மொழி | பழமை | முனை |
| தமிழர் | பல்லாயிரம் | குன்றம் |
| தாய்நாடு | கொள்ளப்பட்டது | சூழ்ந்திருக்கிறது |
| தாயகம் | பிரிவு | ஜில்லா |
| குடிகள் | அரசர் | அரசாங்கம் |
| வழங்கும் | மன்னர் | பேராறு |
| கோடி | வழக்கில் | பெருமை |
| அமிழ்து | கும்பிடு | |

## பயிற்சி

வாழ்கிறோம், ஒற்றுமை, நாடு, விளங்கிற்று, மலை— இவை ஒவ்வொன்றும் என்ன சொல்?

## கேள்விகள்

1. தமிழ் நாட்டின் பண்டை அரசர்கள் யாவர்?
2. இப்போது தமிழகம் எவ்வாறு பிரிக்கப்பட்டிருக்கிறது?
3. தமிழ் நாட்டில் ஓடும் பேராறுகள் யாவை?
4. தமிழர்களாகிய நாம் எவ்வாறு வாழவேண்டும்?

## 4. தெய்வத்தை நம்பிய புருக்கள்

ஆணும், பெண்ணுமாக இரண்டு புருக்கள் ஒரு நாள் ஒரு மரத்தின் மேல் உட்கார்ந்திருந்தன. அவை எழுந்து கிளம்பினால், அவற்றை அடித்துக் கொண்டு போக, ஓர் இராஜாளி மேலே ஆகாயத்தில் வட்டமிட்டுக் கொண்டு இருந்தது. இராஜாளிக்குப் பயந்து, அப்புருக்கள் இரண்டும் மரக் கிளையிலேயே வெகு நேரம் அமர்ந்திருந்தன.



அப்போது ஒரு வேடன் தற்செயலாக அம் மரத்தின் கீழ் வந்து தங்கினான். மரக்கிளையில் அமர்ந்திருந்த புருக்களை அவன் கண்ணுற்றான். அவற்றைக் கொன்று தின்ன வேண்டும் என்ற தீய எண்ணம் அவனுடைய உள்ளத்தில் எழுந்தது. உடனே அவன், தன் கையிலிருந்த வில்லை வளைத்து,

அதில் அம்பைத் தொடுத்து அப்புருக்கள் இரண்டை யும் ஒரே குறியில் எய்து கொல்ல எண்ணினுன்.

வேடனுடைய செய்கையையும் புருக்கள் கவனித் தன. "தெய்வமே, இரு பக்கத்திலும் பகைவர்கள் இருக்கின்ருர்களே! மேலே பறந்து கிளம்பினுல் இராஜாளி எங்களைப் பற்றிக் கொன்றுவிடும்; கிளையிலேயே அமர்ந்திருந்தால் வேடனுடைய அம்பிற்கு இலக்கு ஆவோம். இருதலைக் கொள்ளி எறும்பு போல் அகப்பட்டுக்கொண்டோமே! நீயே எங்களைக் காக்கவேண்டும்" என்று மனம் கலங்கி வேண்டின.

அந்நிலையில் அவ் வேடன் அப் புருக்களைக் குறி பார்த்துக்கொண்டே மெல்ல மெல்லப் பின்னே நகர்ந்தான். அங்கே அவனுக்குப் பின்புறத்தில் ஒரு பாம்புப் புற்று இருந்தது. அதை அவன் கவனிக்க வில்லை. அப்புற்றினுள் இருந்த ஒரு நாகம் வெளியே வந்து அவனுடைய காலில் தீண்டிற்று. அதற்குள் அவன் அம்பை எய்து விட்டான். அவ்வம்பு குறி தப்பிச் சென்று, மேலே வட்டமிட்டுக்கொண்டிருந்த இராஜாளியைக் கொன்றது. வேடன் மயக்கமுற்றுக் கீழே விழுந்து இறந்தான்.

இடுக்கண்களிலிருந்து விடுபட்ட புருக்கள் இரண்டும் தெய்வத்தை வாழ்த்திப் பறந்து சென்றன.

இக் கதையினுல் "எல்லாம் தெய்வச் செயல்" என்றும், "கடவுளை நம்பினோர் துன்பங்களிலிருந்து விடுவிக்கப்படுவர்" என்றும் இரு உண்மைகள் விளங்குகின்றன அல்லவா?

| | | |
|---|---|---|
| கிளம்பினுல் | வட்டமிட்டுக்கொண்டு | தீய |
| இராஜாளி | அமர்ந்திருந்தனர் | உள்ளம் |
| தொடுத்து | கண்ணுற்முன் | அம்பு |
| இலக்கு | இருதலைக்கொள்ளி | வில் |
| நிலை | தீண்டிற்று | குறி |
| புற்று | மயக்கம் | எய்து |
| விடுபட்ட | இடுக்கண் | பற்றி |

## பயிற்சி

படத்தில் நீ காண்பவைகளைப் பற்றிச் சில வாக்கியங்கள் கூறு.

## கேள்விகள்

1. புருக்களுக்கு ஏற்பட்ட இடுக்கண்கள் யாவை ?
2. அப்போது அவை என்ன செய்தன ?
3. வேடன் எவ்வாறு ஆனுன் ?
4. இராஜாளி எவ்வாறு இறந்தது ?
5. இக்கதையால் விளங்கும் உண்மைகள் யாவை ?



# 5. தென்னை இனம்

மாணவ மாணவிகளே, நான் யாரென்று உங்களுக்குத் தெரியுமா? நான்தான் தென்னை. நான் என்னையும் என் இனத்தையும் பற்றிய கதையை உங்களுக்குச் சொல்ல விரும்புகின்றேன். முதலில் என்னோடு சேர்ந்தவை இன்னின்ன என்று கூறியபின் என்னைப்பற்றி உரைக்கின்றேன். பனை, கமுகு, ஈந்து முதலியன என் இனத்தைச் சேர்ந்தவை.

நான் வெப்பமுள்ள நீர்ப்பாங்கான இடத்தில் வளர்வேன்; என்னை நட்டு வளர்த்த ஐந்தாண்டுகளுக்குள் பலன்தரத் தொடங்குவேன். நான் பற்பல நன்மை தீமைகளுக்கும் பயன்படுகின்றேன்;

திருமணத்தின் போதும் திருவிழாக் காலங்களிலும் சில சிறப்பான நாட்களிலும் என் குருத்தைக் கொண்டு பற்பல விதங்களில் வீடுகளை அழகுபடுத்து கின்றனர் ; சுருங்கக்கூறின், கூரைவீடு முழுவதும் என்பாலுள்ள பாகங்களால் ஆகியவை என்று கூறலாம். என்னை மக்கள் பூவுலகக் கற்பகத்தரு என்று கூறுவர்.

நான் பெரும்பாலும் பல பண்டங்களிலும் சேர் கின்றேன். தேங்காயைக் குழம்புக்கு உபயோகிக் கின்றனர். நான் கடவுள் வழிபாட்டுக்கு இன்றியமை யாப் பொருளாகின்றேன். தேய்க்க எண்ணெய் ஆகின்றேன் ; கட்டுதற்குக் கயிருகின்றேன். வீட் டிற்கு விட்டமாயும், உறைத்து நிற்க உத்திரமாய்ம், மேற்கூரை வரிச்சலாயும், கீற்ருயும், கால் துடைக்க மிதியாயும், வாய்க்கால் கடக்க வழிப் பாலமாயும் வீடு பெருக்க விளக்குமாருகவும் பயன்படுகின்றேன். வேனிற்கால பானத்திற்கு இளநீர் தருகின்றேன். ஆதலின் மக்கள் என்னைப் போற்றிவருகின்றனர்.

என்பாற் சேர்ந்த பனை என்னைப் போல மக்க ளுக்கு ஓரளவு பயனுடையது. இது வெப்பமான இடங்களில் பயிராகும். பனையினின்று பதநீர் இறக்கிப் பக்குவமாகக் காய்ச்சிப் பனைவெல்லம் செய் கின்றனர். பதநீரை நாள்தோறும் காலையில் பருகி வந்தால், உடல் வெப்பம் தணியும். மனிதர் தத்தம் நிலங்களின் வரம்புகளைக் காட்டப் பனங்கொட்டை களைப் போட்டு முளைக்க வைக்கின்றனர் ; அவை சிறு கன்றுகளாக ஆவதற்கே குறைந்தது பத்தாண் டாகும் ; பெருமரமாகி நுங்குதர முப்பதாண்டேனும் ஆகும். இதன் பழத்தைக்கூட மனிதர் தின்கின்றனர்.

இதனால்தான் "பசிக்குப் பனம்பழத்தைத் தின்றால், பித்தம் படாதபாடு படும்" என்ற பழமொழி வழங்குகிறது.

என்னுடன் அடுத்து உறவுள்ளது கமுகு. இது வெப்பமும் குளிர்ச்சியும் பொருந்திய இடங்களில் பயிர் செய்யப்படும். இதுவும் மக்களுக்குச் சிறிதளவு பயனுடையது. இதன் முற்றிய கொட்டைகளைச் சீவலாகச் சீவி அச்சீவலை வெற்றிலையுடன் போட்டு மென்று தின்கின்றனர். திருமணத்தின் போது வந்தவர்களுக்குச் சீவலை வெற்றிலையுடன் சேர்த்து வழங்குகின்றனர். நம் வீட்டுக்கு வந்தவர்க்கு மரியாதை காட்டக் கொடுப்பதுமுண்டு.

என்னைச் சேர்ந்த மற்றொன்று ஈந்து. அதனை ஈச்சமரம் என்று சொல்வர். இதனை மனிதர் முளைக்க வைக்காமலே இனம் பெருக்கும் முறைகளால் காடுகளில் தானே முளைத்துப் பயிராகிறது. இதன் பழம் உண்ண உருசியாய் இருக்கும். மரமான பின்னர் மேலேறிப் பழங்கொள்ள இயலாது; சிறு செடியாய் இருக்கும்போதே இனிய பழம் தரும். இதன் ஓலைகளால் பாய் பின்னுகின்றனர்.

எங்களை நட்பினர்களுக்கு உவமையாகப் புலவர்கள் கூறுவதுண்டு. முதல் நட்பினர் கண்டு பேசிய நாள் தொடங்கி, அடிக்கடி வந்து கண்டு கொள்ளாவிடினும் உள்ளம் ஒத்த நட்பினராய் விளங்குவர். அதுபோலப் பனங்கொட்டையை ஊன்றியபின்னர் அதற்குத் திரும்பத் திரும்பத் தண்ணீர் ஊற்றிப் பாதுகாக்காவிட்டாலும் பிற்காலத்தில் நல்ல இனிய நுங்கு தந்து மகிழ்விக்கும்.

இடை நட்பினர் சில நாட்களுக்கு ஒரு முறையே னும் கண்டு நலம் விசாரித்தால்தான் நட்புடன் இருப்பர். அதுபோலத் தென்னம்பிள்ளையை ஊன்றிய பின்னர் சில நாட்களுக்கு ஒருமுறையாகப் பல தடவை வந்து தண்ணீர் ஊற்றிக் காப்பாற்றினுல்-தான் நற்பலன் தரும்.

கடை நட்பினர் இடைவிடாது நாள்தோறும் சென்று கலந்து உறவாடிப்பழகினுல்தான் அவர்கள் நட்பு நிலைக்கும்; இல்லையாயின் நீங்கும். அது போன்றே கமுகு மரத்தைத் தினந்தோறும் தண்ணீர் ஊற்றிப் பேணி வந்தால்தான் அது பின்னுளில் நற்பயன் நல்கும்.

| | |
|---|---|
| முதன்மையாக | இனம் பெருக்கும் முறை |
| உரைக்கின்றேன் | நீர்ப்பாங்கான |
| திருமணத்தின் போது | வரம்பு காட்ட |
| வரிச்சல் | வேனிற் காலம் |
| படாதபாடு | பானமாக |
| உறவுள்ளது | பனையினின்று |
| கொள்ளாவிடினும் | துருவலாக |
| இன்றியமையாத | பூவுலகம் |
| இன்னின்ன | கற்பகத்தரு |

**பயிற்சி**

(1) பெயர்ச் சொல் சேர்த்துப் படி.

—— உயரமாக வளரும்.

—— —— நீ பார்த்திருக்கிருயா ?

—— —— —— —— இவைகள் ஓர் இனம்.

(2) வினைச்சொல் சேர்த்துப் படி.

மணற்பாங்கான இடங்களில் தென்னை மரம் ——.

உங்கள் ஊரில் பனை மரங்கள் ——.

உனக்கு நுங்கு ——.

**கேள்விகள்**

1. தென்னை இனத்தைச் சேர்ந்தவை யாவை?
2. தென்னையின் உபயோகங்களைக் கூறு.
3. முதல் நட்பினர் ஏதற்கு உவமையாகக் கூறப் பட்டுள்ளனர்? விளக்கிக் கூறுக.
4. கமுகு ஏன் கடை நட்பினருக்கு உவமிக்கப் பட்டுள்ளது?
5. பதநீரின் நன்மை என்ன?
6. பனையைப்பற்றிய பழமொழி யாது?

# 6. கண்ணாடி

**தகப்பனார்** :—கந்தா, காலையில் என்ன விளை யாட்டு விளையாடுகிறாய்?

**கந்தன்** :—நான் கோலி ஆட்டம் ஆடுகிறேன்.

**தகப்பனார்** :—உன்னுடைய கோலிகளைக் கொண்டுவா பார்ப்போம்.

**கந்தன்** :—இதோ! கொண்டு வருகிறேன்.

**தகப்பனார்** :—(கண்ணாடிக் கோலியை எடுத்துக் கொண்டு) இது என்ன கோலி, கந்தா?

**கந்தன்** :—அப்பா, இதுதான் கண்ணாடிக்கோலி.

**தகப்பனார்** :—கண்ணாடி எப்படிச் செய்யப்படு கிறதென்று உனக்குத் தெரியுமா?

**கந்தன்** :—அப்பா, அதன் விவரம் யாதொன்றும் எனக்குத் தெரியாது. அதைப்பற்றி எனக்குத் தெரிவி யுங்கள்.

**தகப்பனார்** :—இப்பொழுதே கூறுகின்றேன் கேள். ஆவலுடன் கூர்ந்து கேட்டால், நன்றாக நினைவில் தங்கும்.

**கந்தன் :**—அப்படியே செய்கிறேன் அப்பா.

**தகப்பனர் :**—கண்ணுடி ஒருவகை மணலினுல் ஆகிய ஒரு பொருள். சிற்சில இடங்களில் கிடைக் கும் நல்ல மணலையும் சோடா உப்பையும் சுண்ணும்பு நீற்றையும் சிறிது கரித்தூளையும் கலந்து நன்கு



பொடிசெய்து அதிகச் சூடுள்ள உலைகளில் வைத்துக் காய்ச்சுவார்கள். அப்பொருள்கள் மெழுகென உருகிப் பாகு போன்ற திரவம் உண்டாகும். அதை அச்சுக் கட்டைகளில் ஊற்றிப் பலவித வடிவுடைய பொருள் கள், பாத்திரங்கள் முதலியன செய்யப்படுகின்றன.

**கந்தன்** :—அப்பா, இது உண்டாகும் விதம் அறிந்தேன். இது எவ்வாறு, யாரால் முதன்முதலில் கண்டுபிடிக்கப்பட்டது என்பதை எனக்குச் சற்றுத் தெளிவுடன் அறிவிக்கவேண்டுகிறேன்.

**தகப்பனுர்** :—பல ஆண்டுகளுக்கு முன் ஆங்கிலேய மாலுமிகள் சிலர் ஆசியா மைனர் என்னும் நாட்டின் கடற்கரையில் தங்க நேர்ந்தது. அச்சமயம் அவர்கள் மணலைத் தோண்டி அடுப்புப் போலச் செய்து நெருப்புப் போட்டுச் சோறு ஆக்கினர். அப்பொழுது அடுப்பின் அடிப்பாகத்திலுள்ள மணலெல்லாம் வெப்பத்தால் திரவமாகி நல்ல ஒளியுள்ள பொருக்குகளாகத் தென்பட்டன. அவைகளைக் கண்டதும் அவர்கள் எல்லாப் பொருக்குகளையும் வேண்டிய அளவு மணலையும் தங்கள் நாட்டிற்கு எடுத்துச் சென்று சோதித்துப் பார்த்தனர். பின்னர், கண்ணுடியாகச் செய்ய முற்பட்டனர்.

**கந்தன்** :—அப்பா, கண்ணுடி கண்டுபிடிக்கப்பட்ட விவரம் அறிந்தேன். எனக்கு இதன் தன்மைகளைப் பற்றிக் கொஞ்சம் தெரிவிக்க விரும்புகிறேன்.

**தகப்பனுர்** :—கூறுகிறேன். நீ நன்கு கவனி. இது ஒளியைத் தன்வழியாக ஊடுருவிச் செல்லவிடும். இதனுல் ஆகிய பாத்திரங்களில் வைக்கப்படும் சுவையான பண்டங்கள் கைத்துப்போகா. இன்ன பொருள் உட்பக்கம் உள்ளது என்று வெளிப்பக்கத்திலிருந்து அறியலாம். இதனேடு பல வர்ணங்கள் கலந்து அழகிய பொருள்களை உண்டாக்க முடியும்.

**கந்தன் :**—அப்பா, இதனுல் ஏற்படும் தீங்குகள் இருந்தால் கூறுங்கள். நான் தெரிந்துகொள்ள மிகவும் விரும்புகிறேன்.

**தகப்பனுர் :**—இதுகூட உனக்குத் தெரியாதா ! வேண்டுமானுல் சொல்லுகிறேன். இதன் உடைந்து போன துண்டுகள் கீழே கிடந்து காலில் குத்தி விட்டால், அக்குத்துவாய் நஞ்சுப் புண்ணுக மாறிப் பெருந் தீங்கை உண்டாக்கும். இது உடையுந் தன்மை உடையது ; அதிக உஷ்ணம் ஏறிய கண்ணுடி யில் குளிர்ந்த நீர்பட்டால், அது உடனே வெடித்து விடும்.

**கந்தன் :**—அப்பா, கண்ணுடியைப்பற்றி இன்று நன்ருகத் தெரிந்துகொண்டேன். அம்மா சிற்றுண்டி சாப்பிடக் கூப்பிடுகிருள். போவோம் வாருங்கள்.

**தகப்பனுர் :**—சரி, அப்படியே செல்வோம்.

| | |
|---|---|
| தெரிவியுங்கள் | தென்பட்டன |
| கூர்ந்து | முற்பட்டனர் |
| நீற்றையும் | ஊடுருவி |
| வடிவுடைய | சுவையான |
| முதன்முதலில் | பண்டங்கள் |
| தெளிவுடன் | கைத்துப்போகா |
| அறிவிக்க | அறியலாகும் |
| ஆங்கிலேய | குத்திவிட்டால் |
| திரவமாகி | பெருந்தீங்கு |
| பொருக்குகள் | சிற்றுண்டி |

## இலக்கணம்

கண்ணுடி—என்பது ஒரு பொருளின் பெயர்.
வீடு—என்பது ஓர் இடத்தின் பெயர்.
காலை—என்பது ஒரு காலத்தின் பெயர்.
கை—என்பது ஒரு சினையின் (உறுப்பின்) பெயர்.
உஷ்ணம்—என்பது குணத்தின் பெயர்.
ஓடுதல்—என்பது ஒரு தொழிலின் பெயர்.

பெயர்ச் சொற்கள் பொருட்பெயர், இடப்பெயர், காலப் பெயர், சினைப் பெயர், குணப்பெயர், தொழிற் பெயர்—என்று ஆறு வகைப்படும்.

## கேள்விகள்

1. கண்ணுடி எப்படிச் செய்யப்படுகிறது?
2. கண்ணுடி எவ்வாறு, யாரால் முதன் முதலில் கண்டுபிடிக்கப்பட்டது?
3. கண்ணுடியின் நல்ல தன்மைகளைச் சொல்லுக.
4. கண்ணுடியால், நமக்கு ஏற்படும் தீங்கு யாது?



# 7. பருத்தி

நாம் பலவித ஆடைகளை உடுத்துகிறோம். அவைகளுள் சில பட்டினாலும் சில பருத்தியினாலும் நெய்யப்பட்டவை. என்றாலும் பொதுவாக நம் நாட்டுமக்கள் பருத்தியினால் ஆகிய ஆடைகளையே மிகுதியாக உடுத்துகின்றனர். ஆகவே, நமது ஆடைக்குப் பருத்தியிலிருந்து கிடைக்கும் பஞ்சே பெரும்பாலும் பயன்படுகின்றது. இத்தகைய பஞ்சு நமக்கு எவ்வாறு கிடைக்கிறது என்பதை அறிவோம்.

பருத்தியில் மூன்று வகைகள் உண்டு. ஒன்று இலவம் பஞ்சு. அது மரத்தில் உண்டாவது. அம் மரத்திற்கு இலவ மரம் என்று பெயர். இலவம் பஞ்சு மெத்தைகளுக்கும், தலையணைகளுக்கும் உபயோகப்படுகிறது. மற்றொன்று செடியில் உண் டாவது. இவ்வகையே பெரும்பாலும் ஆடைகளுக்கு

உதவுகின்றது. கொடியில் உண்டாகும் வகையும் உண்டு. கொடிப் பருத்தி அதிகமாகப் பயிராவ தில்லே.

பருத்திச் செடி பொதுவாகக் கரிசல் நிலங்களே உடைய உஷ்ணப் பிரதேசங்களில் மிகுதியாக விளே யும்; ஆகவே, பருத்திச் செடி வானம் பார்த்த பிர தேசங்களில் நன்ருக விளேயும். பருத்திக் காய்கள் நன்கு முற்றிய பிறகு, அவைகளிலிருந்து பஞ்சை எடுப்பார்கள். பிறகு பஞ்சு வேறு விதை வேருகப் பிரிக்கத் திரிமணே என்ற ஒரு கருவியை உபயோகிப் பர்; கை ராட்டினம், தக்களி முதலியவற்றின் துணே கொண்டு நூலாக நூற்று வீசனத்தில் சுற்றுவர்; பின்னர், ஆடையாக நெய்வர். இவ்வாடைக்குக் கதராடை எனப் பெயர்.

பொதுவாக நம் இந்திய நாட்டில் பம்பாய், பஞ்சாப், பீரார், ஹைதராபாத், சென்னே முதலிய மாகாணங்களில் பருத்தி பயிரரகிறது. சென்னே இராச்சியத்தில் கடப்பை, கர்நூல், பல்லாரி, அனந்தப் பூர், திருநெல்வேலி, இராமநாதபுரம், கோயமுத்தூர், ஆர்க்காடு முதலிய இடங்களிலும் பருத்தி மிகுதியாகப் பயிரிடப்படுகிறது.

வேற்று நாடுகளாகிய அமெரிக்கா, எகிப்து முதலிய இடங்களில் மிருதுவான நீண்ட இழைப் பஞ்சு ஆங்கு விளேயும் பருத்திச் செடிகளின்றும் எடுக்கப்படுகிறது. ஆனல் நம் நாட்டில் குட்டை இழைப் பருத்தியே பயிரிடப்படுகிறது. இக்குட்டை இழைப் பருத்தி பிரிட்டன், ஜப்பான் போன்ற அயல் நாடுகளுக்கு அனுப்பப்படுகின்றது. உலகிலேயே

பருத்தி விளைவில் நம் தாயகமாகிய இந்திய நாடு இரண்டாவது நிலையை எய்தியுள்ளது. இப்பருத்தித் தொழிலைப் போற்றி வளர்ப்போமாக.

மேலும், நம் தமிழ் நாட்டில் சென்னை பக்கிங் ஹாம் மில்ஸ்,, கர்னுட்டிக் மில்ஸ், கோயமுத்தூர் மில்ஸ், மேட்டூர் மில்ஸ் முதலிய பல்வேறு பெயர் கொண்ட நெசவாலைகள் உள்ளன.

காந்தியடிகள் நூல்நூற்றலால், பொறுமை, வாய்மை, உள்ளுரம் முதலியன ஏற்படுகின்றன என்று வற்புறுத்திக் கூறியுள்ளனர். இதனைச் செயல் முறையில் கொண்டு வருபவரே உணரலாகும்.

சற்றேறக் குறைய இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முன்பு வாழ்ந்துவந்த வள்ளுவப் பெருந் தகையார் இச் சிறந்த தொழிலையே செய்து காலங் கழித்து வந்தார். இன்னும் நூல் நூற்றல் குறித்துச் சிலப்பதிகாரம் முதலிய நூல்களில் பரக்கக் காண லாம்.

சீரும் சிறப்பும்பெற்ற இத்தொழிலை நாம் அனை வரும் செய்து நம் சுயதேவையைப் பூர்த்தி செய்து கொள்வோமாக.

| | | |
|---|---|---|
| **மெத்தை** | **கரிசல் நிலம்** | **வானம் பார்த்த** |
| **தலையணை** | **பிரதேசம்** | **திரிமணை** |
| **வேற்றுநாடு** | **கதராடை** | **வீசனம்** |
| **வாய்மை** | **உள்ளுரம்** | **வற்புறுத்தி** |
| **பொறுமை** | **பரக்க** | **செயல்முறை** |
| **சீர்** | **சுயதேவை** | **பூர்த்தி** |

**பயிற்சி**

(1) வாக்கியங்களில் அமைத்துக் கூறு.

இழை, குட்டை, நாடு, போற்றி, சிலப்பதிகாரம்.

(2) செடி, ஆடை, நிலம், பொறுமை, நெசவு, நூற்றல், ஆண்டு, பம்பாய் :—இப்பெயர்ச் சொற்கள் எந்த வகையைச் சேர்ந்தவை ?

**கேள்விகள்**

1. பருத்தியில் என்னென்ன வகைகள் உண்டு ?
2. திரிமணை எதற்கு உதவும் ?
3. கதராடை எவ்வாறு தயாரிக்கப்படுகிறது ?
4. சென்னை மாகாணத்தில் எந்தெந்த இடங்களில் மில் துணிகள் தயாரிக்கப்படுகின்றன ?

## 8. கோபால கிருஷ்ண கோகலே

தாய் நாட்டிற்குப் பெருந் தொண்டாற்றிய தேச பக்தர்களுள் கோபால கிருஷ்ண கோகலே என்பாரும் ஒருவர். உடலாலும், பொருளாலும், உளத்தாலும் நாட்டிற்கு அரிய தொண்டு செய்தவர் இவர்.

இவர் மகாராஷ்டிர நாட்டைச் சேர்ந்த கோலாப் பூரில் ஏழ்மை மிக்க பிராமண குடும்பத்தில் 1866-ஆம் ஆண்டு தோன்றினர். இவருடைய தகப்பனர் கோலாப்பூருக்கு அருகிலுள்ள காகல் என்னும் ஊரில் ஒரு சிறு வேலையில் அமர்ந்திருந்தார். கோகலே சிறு வயதிலேயே தம் தந்தையாரை இழக்க நேரிட்டது. எனினும் இவருடைய சகோதரராகிய கோவிந்தராவ் இவருக்கு உதவி புரிந்தார்.

கோலாப்பூரில் கோகலே எப். ஏ. வரையிலும் படித்த பின்னர், பம்பாய் சென்று பீ. ஏ. படிப்பை முடித்துக் கொண்டார். கோகலே எல்லாப் பாடங்களிலும் நல்ல அறிவு உடையவர். பொறிநூல் அறிஞர் (எஞ்சினீயர்) ஆவதற்கும் சிறிது காலம் பயின்று வந்தார். இவர் ஐ. ஸி. எஸ். பரீட்சை எழுத இங்கிலாந்துக்குச் செல்லவேண்டுமென்ற பெரு விருப்



புடையவராக இருந்தார். ஆனால் அவ்வெண்ணம் பலிக்காது போயிற்று.

அக்காலத்தில் நம் நாட்டில் ஆங்கிலக் கல்வியைப் பரப்பவேண்டுமெனப் பல அறிஞர்கள் பாடுபட்டனர். அக்காரியத்தில் பெரிதும் உழைத்தவர் பால கங்காதர திலகர், அகர்கர், சிப்பளங்கர் என்னும் அறிஞர்கள் ஆவர்.

இவர்களும் வேறு சிலரும் சேர்ந்து ஒரு பாடசாலையை நிறுவினர். அது சிறந்து வளர்ந்து மேன்மையுற ஆரம்பித்தது.

அப்பொழுது அவர்கள் தக்கணக் கல்விச் சங்கம் ஒன்று பூனாவில் ஏற்படுத்தி அதில் பல எளிய மகா

ராஷ்டிர மாணவர்களுக்கு இலவசமாகக் கல்வி புகட்டி வந்தனர். அப் பணியில் கோகலே ஊதியத்தை அதிகம் பொருட் படுத்தாது ஆசிரியராக வேலைபார்த்து வந்தார். இவர் சிறந்த ஆசிரியரெனப் பலராலும் போற்றப் பெற்ருர். ஏனெனில், எந்தப் பாடத்தையும் எளிய முறையில் மாணவர் மனத்தில் பதியுமாறு கற்பித்து வந்தார்; மாதவ கோவிந்த ரானடே என்னும் அரசியல் நிபுணரிடம் பலகால் பழகிவந்தமையால், அரசியல் நுணுக்கங்களையும் நன்கு அறியலானுர்; சர்வஜன சபையார் ஏற்படுத்திய பத்திரிகைக்கு ஆசிரியராகவும் இருந்துவந்தார்; பிறகு அச்சபை யுடன் முரண்பட்டுத் தக்கண சபை என்ற சங்கத்தை ஏற்படுத்திஞர்.

இவர் பம்பாய் சட்ட நிரூபண சபை உறுப்பின ராகவும், பூஞ நகரசபை உறுப்பினராகவும் இருந்து பற்பல அரிய சேவைகள் செய்து வந்தார். பொதுத் தொண்டில் இறங்கிய இவர் மனம் ஆசிரிய வேலையில் அமர்ந்திருக்க ஆவல் கொள்ளவில்லை. ஆகவே, இவர் அத்தொழிலை விடுத்தார்.

எல்லோருக்கும் இலவசக் கட்டாயக் கல்வி அளிக்கப்படவேண்டுமென்ற ஆரம்பக் கல்வி மசோ தாவை இவர் சட்டசபை ஆராய்ச்சிக்குக் கொண்டு வந்தார். வரிச்சுமையால் குடியானவர்கள் மிகக் கஷ்டப்பட்டனர். அக்கஷ்டத்தை நீக்க இவர் பெரும் பாடுபட்டார். தேசத் தொண்டே வாழ்க்கைத் தொண் டெனக் கருதி உழைத்து வந்த இந்தியர் ஊழியர் சங்கம் பூஞவில் 1905 ஆம் ஆண்டில் இவரால் ஏற்படுத்தப்பட்டது. இவர் வெளியூர்களுக்குச்சென்று இந்தியர் அங்குப் படுந்துன்பத்தை நீக்கப் பெரிதும்

பாடுபட்டார். இவ்வாறு இவர் தென்னுப்பிரிக்கா, மோரிசு, நேடால், பினுங்கு, சிங்கப்பூர் முதலிய ஊர்களுக்குச் சென்று திரும்பிய பிறகு மீண்டும் தென்னுப்பிரிக்கா சென்று அவ்வரசாங்கத்தாரோடு பலவகைகளில் உடன்படிக்கை செய்து கொண்டார்.

கோகலே சிறந்த அறிவாளி; உண்மையை ஒரு பொழுதும் மறக்காத இயல்புடையவர்; பிறர் செய்த குற்றங்களை முன்னின்று கண்டித்துப் பேசும் தன்மை உடையவர்; ஊக்கமும் விடா முயற்சியும் ஒருங்குடையவர். தன்னலம் பேணுத் தகைமையாளர். இவ்வாறு பெரும் புகழ்பெற்று விளங்கிய கோகலே பெருமான் 1915-ஆம் ஆண்டு இவ்வுலக வாழ்வை நீத்தார். எனினும், இவருடைய புகழுடம்பு இன்றும் நின்று நிலவுகிறது.

| | |
|---|---|
| தொண்டாற்றிய | முன்னின்று |
| உளத்தாலும் | தகைமையாளர் |
| ஏழ்மைமிக்க | ஒழுங்குடையவர் |
| பலிக்காது | நிலவுகிறது |
| உடன்படிக்கை | இயல்புடையவர் |

### பயிற்சி

மௌனமாகப் படி :

(1) தொண்டு செய்கிறவர் தொண்டர்.

(2) பக்தியுடையவர் பக்தர்.

(3) அறிவு உடையவர் அறிஞர் அல்லது அறிவாளி.

இதே மாதிரி பின் வருபவைகளையும் முடித்துக்கூறு.

செல்வம் உடையவர் ———.

படிப்பு உடையவர் ———.

தொழில் செய்பவர் ———.

முதல் உடையவர் ———.

**கேள்விகள்**

1. கோகலேக்குச் சிறுவயதில் உதவி செய்தவர் யார்?
2. இவர் சிறந்த ஆசிரியரெனப் புகழ்ப்பெறக் காரணம் என்ன?
3. கோகலே கல்விகற்ற வரலாற்றைக் கூறுக.
4. கோகலே நம் நாட்டு மக்களிடத்தில் அதிகப் பற்றுடையவர் என்பதை விளக்குக.
5. கோகலேயின் குணாதிசயங்களைக் கூறுக.

# 9. சிவாஜி

தென்னிந்தியாவில் தோன்றி விளங்கிய வீரர்களுள் சிவாஜி ஒருவர். சாதாரண வீரராக இருந்த அவர் தம்முடைய முயற்சியால் ஒரு சுயேச்சை மன்னர் ஆனார். மகாராட்டிர சமூகம் சிவாஜியால் முன்னேற்றம் அடைந்தது. மகாராட்டிரரை நாடாளும் மரபினராகச் செய்தவர் சிவாஜியே. அவரால் இந்திய சரித்திரத்தில் மகாராட்டிரரின் போர்த்திறமை என்றும் விளங்குவதாயிற்று.

சிவாஜி பூனாவில் பிறந்தவர். அவருடைய தகப்பனார் பெயர் ஷாஜி; தாயார் பெயர் ஜீஜீபாய். ஷாஜி என்பவர் பீஜப்பூர் சமஸ்தானத்தில் ஓர் உயர்ந்த அலுவலில் இருந்தார்.

சிவாஜியை அவருடைய இளமையில் ஜீஜீபாயும், தாதாஜி என்ற ஆசிரியரும் கண்காணித்து வந்தார்கள். அவர்கள் அவருக்குப் பண்டை வீரர்களின் சரித்திரங்களை அடிக்கடி கூறி வந்தார்கள். தாமும் ஒரு வீரராக வேண்டும் என்ற அவா சிவாஜியின் உள்ளத்தில் குடிகொண்டது. ஆகையால், அவர் போர்

முறைகளை நன்கு பயின்ருர்; போர் முறைகளில் பயிற்சி பெற்ற தோழர்கள் பலரைச் சேர்த்து ஒரு படையை அமைத்தார்; நாளடைவில் பூனுவில் ஒரு மகாராட்டிர அரசாங்கத்தை ஏற்படுத்திஞர்.

அக்காலத்தில் தென்னிந்தியாவில் முஸ்லீம் அரசுகளும், இந்து அரசுகளும் பல இருந்து வந்தன. வட இந்தியாவில் டில்லி மா நகரில் முகலாய சக்கர



வர்த்தி ஆட்சி செய்து வந்தார். சக்கரவர்த்தியாருடைய ஆதிக்கம் இந்தியாவில் பெரும் பகுதியில் பரவி இருந்தது. சிவாஜியின் தீரத்தைக் கண்ட சக்கரவர்த்தியார் அவரையும் ஒரு மன்னராக ஏற்றுக் கொண்டார்.

சிவாஜி மன்னர் தெய்வ பக்தியும், சத்தியமும், பெருந்தன்மையும் உடையவர்; சான்றோர்களிடத்தில்

அவர் பற்று உடையவர் ; இடுக்கண்களுக்கு அஞ்சாத நெஞ்சம் படைத்தவர் ; முயற்சியில் பின்வாங்காத ஊக்கமும் துணிவும் உடையவர் ; எதிரிகளின் படைகள் தம்மால் தோற்கடிக்கப் பட்டாலும், அவர் களைச் சேர்ந்த பெண்களிடமும், மற்ற மக்களிடமும் எவ்வித விரோதமும் பாராட்டமாட்டார் ; அவர்களைத் தக்கவாறு பாதுகாத்து அனுப்புவார் ; நாட்டின் நிலைமையையும், சமூகத்தையும் உயர்த்த வேண்டும் என்பதே அவருடைய நோக்கம்.

சிவாஜி எழுதப் படிக்கத் தெரியாதவர். அவ்வாறு இருந்தும் அவர் தம்முடைய மதிவன்மையாலும், வாய்மையாலும் நாட்டை நேர்மையாக ஆண்டு வந்தார். சிவாஜியின் பெயர் இந்திய சரித்திரத்தில் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. சிவாஜி நாட்டிய அடிப்படையால், மகாராட்டிர அரசுகள் பல இந்தி யாவில் தோன்றலாயின. ஒரு காலத்தில் மகாராட்டிர ராஜ்யங்கள் இந்தியாவில் வல்லரசுகளாக விளங்கின. இப்போதும் மகாராட்டிரச் சிற்றரசுகள் பல உள. இந்தியக் குடியரசுடன் அவை இணைப்புற்று விளங்கு கின்றன. சிவாஜியின் வரலாற்றைப் பற்றி நீங்கள் மேல் வகுப்புக்களில் விரிவாக அறிவீர்களாக.

| | | |
|---|---|---|
| **சுயேச்சை** | **சமஸ்தானம்** | **அலுவல்** |
| **போர்த்திறமை** | **குடிகொண்டது** | **போர் முறை** |
| **அவா** | **ஆதிக்கம்** | **சக்கரவர்த்தி** |
| **பயின்றார்** | **ஏற்றுக்கொண்டார்** | **பெரும் பகுதி** |
| **தீரத்தை** | **மரபினர்** | **தெய்வ பக்தி** |
| **சத்தியம்** | **இடுக்கண்** | **சான்றோர்** |
| **பற்று** | **பாதுகாத்து** | **அஞ்சாத நெஞ்சம்** |

| | | |
|---|---|---|
| வாய்மை | நேர்மை | மதிவன்மை |
| நாட்டிய | அடிப்படை | சரித்திரம் |
| வல்லரசு | சிற்றரசு | குடியரசு |
| பெருந் தன்மை | | |

### இலக்கணம்

**சிவாஜி** :—இப்பெயர் ஒரு மனிதனைக் குறிக்கிறது.

குதிரை, மரம், கல் :—இப்பெயர்கள் ஒவ்வொரு பொருளைக் குறிக்கின்றன.

மனிதரைக் குறிக்கும் பெயர்ச் சொற்கள் **உயர்திணை** எனப்படும். மற்றப் பெயர்ச் சொற்கள் **அஃறிணை** எனப் படும்.

### கேள்விகள்

1. சிவாஜியின் தகப்பனார் பெயர் என்ன? தாயார் பெயர் என்ன? ஆசிரியர் பெயர் என்ன?
2. இளமையில் அவர் கொண்ட அவா என்ன?
3. சிவாஜியிடம் விளங்கிய குணங்கள் யாவை?

## 10. கோழியும் வாத்தும்

குடியானவர்கள் கோழிகளையும், வாத்துக்களையும் வளர்ப்பார்கள். அவை மனிதர்க்கு உபயோகமுள்ள பறவைகள். அவைகளை வளர்ப்பது ஒரு குடிசைத் தொழில் ஆகும். அவைகளை வளர்ப்பதால் வருவாயும் உண்டு. கோழிகள் வளர்ப்பதையும், வாத்துக்கள் வளர்ப்பதையும் சிலர் தொழிலாகக்கொண்டிருக் கிறார்கள்.

சாதாரணக் கோழிகள் மூன்று மாதத்திற்கு ஒரு முறை முட்டை இடும். ஒரு தடவையில் பத்துப் பதி

னைந்து முட்டைகளை இடும். நல்ல சாதிக்கோழிகள் தினந்தோறும் முட்டை இடும். கோழிமுட்டை மனிதர்க்கு உணவுப் பொருளாக உதவுகிறது. கோழி யின் இறைச்சியும் சிலர்க்கு உணவாகும். ஏழை களுக்குக் கோழிகளை வளர்ப்பது ஒரு பிழைப்பு அல்லவா?

கோழி நிலத்தில் மட்டும் வசிக்கும். வாத்து நிலத்திலும் இருக்கும்; நீரிலும் இருக்கும். கோழி யின் அலகு மண்ணைக் கிளறுவதற்குத் தக்கபடி கூர்மையாக இருக்கிறது. வாத்தின் அலகு அகன்று தட்டையாக இருக்கும். அதில் ஒரு சிறு துவாரமும் காணப்படும். நீரில் உள்ள புழுக்களை அது பிடித்துத் தின்னும். அப்போது நீரெல்லாம் அந்தத் துவா ரத்தின் வழியாகப் போய்விடும். வாத்தின் பாதத்தைக் கவனியுங்கள். விரல்களுக்கு இடையில் தோல் இணைந்திருக்கும். அதனால் வாத்திற்குத் தோலடிப் பறவை என்று பெயர். நீரில் நீந்துவதற்கு அதன் தோலடி உதவியாக இருக்கிறது. வாத்தின் உடலில் தண்ணீர் ஒட்டாது. அதன் உடலின் மேற்புறத்தில் ஒருவித நெய்ப்பசை இருக்கிறது.

பெட்டைக் கோழி முட்டை இட்டுக் குஞ்சு பொரிக்கும். வாத்திற்குக் குஞ்சு பொரிக்கத் தெரி யாது. வாத்துமுட்டைகளைக் கோழிமுட்டையுடன் சேர்த்துக் கோழியிடம் வைப்பார்கள். அது அவற்றை அடைகாத்துக் குஞ்சுபொரிக்கும்.

வாத்துமுட்டைகளும் மனிதர்க்கு உணவுப் பொருளாக உதவுகின்றன. வாத்து வளர்ப்போர் நூற் றுக் கணக்கான வாத்துக்களை வளர்ப்பார்கள். அவர் கள் அவைகளை ஓட்டிக்கொண்டு ஊர் ஊராகச் செல்

வார்கள்; ஆங்காங்குள்ள அறுவடையான வயல்களில் மேயவிடுவார்கள். இரவில் அவர்கள் படல் அடைத்து வாத்துக்களைக் காவல் காப்பார்கள். இல்லாவிட்டால் நரிகள் வாத்துக்களைத் தூக்கிக் கொண்டு போய்விடும்.

நல்ல தீனியைத் தின்றால் வாத்துக்கள் தினமும் முட்டை இடும். வாத்துக்காரர்கள் அம்முட்டைகளை விற்றுப் பணம் சம்பாதிப்பார்கள். சிலர் வாத்து வளர்ப்பதை எப்போதும் தமது தொழிலாகக் கொண்டிருக்கிறார்கள். வாத்து முட்டைகள் வெளியூர்களுக்கும் ஏற்றுமதி ஆகின்றன. ஏழைகள் இத் தொழிலைச் செய்வது நல்லது அல்லவா?

| | | |
|---|---|---|
| குடிசைத் தொழில் | வருவாய் | பிழைப்பாக |
| சாதிக் கோழிகள் | உணவுப்பொருளாக | கிளறுவதற்கு |
| பாதத்தை | தோலடிப் பறவை | பொரிக்கும் |
| அறுவடை | சம்பாதிப்பார்கள் | மேய |
| ஏற்றுமதி | | |

## பயிற்சி

(1) பின்வரும் சொற்களைத் தனித்தனி வாக்கியங்களில் அமைத்துக் கூறு.

கோழி, வாத்து, நரிகள், அலகு, முட்டை.

(2) பின்வரும் சொற்கள் ஒவ்வொன்றும் எந்தத் திணையைச் சேர்ந்தவை?

கோழி, வாத்து, மக்கள், கந்தன், கழுதை, மரம்.

## கேள்விகள்

1. கோழிகளை வளர்ப்பதால் என்ன உபயோகம்?
2. வாத்தின் அலகு எப்படி அமைந்திருக்கிறது?
3. வாத்தின் பாதம் எப்படி இருக்கும்? அதனால் அதற்கு என்ன உபயோகம்?

# 11. எவருக்கும் துன்பம் செய்யக்கூடாது

('சந்தைக் கடையில்' என்ற மெட்டு)

கல்வி கற்கும் இளைஞரோர் நாள் பலருங் கூடியே
கல்லும் மண்ணும் வாரிவாரிக் குளத்தில் வீசியே,

கூச்சலிட்டுக் கும்பலாகக் களித்துக் கூவியே
ஓடியாடி மகிழ்ச்சியுடன் தாண்டிக் குதித்தனர்.

தவளை பலவும் அடிகள் பட்டே பதைத்துப் பார்த்திட
தலைகள் நீட்ட முடியா தெனவே தவித்துக் கத்தியே.

அவற்று ளொன்று அண்மை வந்து அச்ச மாகவே
பாலர் தலைவன் தன்னை நோக்கிப் பணிந்து போற்றியே.

சிறுவர் நீரும் களிப்பா லெறியும் கற்க ளெம்மையே
வருந்த வருந்தத் தாக்கிச் சாவச் செய்யும் தீமையே.

ஆகையாலே விளையாட்டாகத் தீமை செய்திடல்
ஆகா தென்றே மதியும் சொல்லிக் குளத்திற் சென்றிட

பாலர் தாமும் தம்மின் பிழையை யெண்ணி வருந்தினர் ;
துன்பஞ் செய்தல் ஆகா தென்றே எண்ணிச் சென்றனர்.

பிறர்கள் தமக்கே துன்பஞ் செய்யார் வாழ்வில் என்றுமே
அறத்தில் தூய ரென்றே வையம் சால வாழ்த்துமே.




## 12. கூட்டுறவுச் சங்கம்

**பொன்னன் :** கந்தா, ஏன் சோர்ந்தாற்போல் இருக்கின்ருய்?

**கந்தன் :** வீட்டிலே தானியம் நிறைந்து இருந்தால் சோர்வு இருக்காது; தானியம் குறைந்தால் சோர்வுதானே! ஆண்டு முழுவதும் எப்படிக் காலம் கழிப்பது?

**பொன்னன் :** தானியம் இல்லையா? அறுவடையாகி மூன்றுமாதமும் ஆகவில்லையே. அதற்குள் தானியம் தீர்ந்து விட்டது என்கின்ருயே!

**கந்தன் :** அறுவடையாகி என்ன பயன்? நல்ல கண்டுமுதல் கிடைத்தது; முக்காற் பங்கு கடனைத் தீர்ப்பதற்கே சரியாகப் போயிற்று.

**பொன்னன்:** யாரிடத்தில் கடன் வாங்கி யிருந்தாய்? எதற்காக வாங்கிஞய்? கண்டுமுதலில் முக்காற் பங்கு எப்படித் தீர்ந்தது?

**கந்தன்:** சென்ற ஆனி மாதத்தில் அயலூர் இலேவாதேவிக் கடையில் உழவுக்காகக் கடன் வாங்கினேன். என் சமயத்திற்குக் கடன் கொடுத்தார்கள்; ஆகையால் அதிக வட்டி கொடுக்க நேர்ந்தது.

அறுவடை ஆயிற்ருே இல்லையோ வசூலுக்கு வந்து விட்டார்கள். தானியங்களுக்குச் சரியான விலை வரவில்லை. கண்டுமுதலைக் குறைந்த விலைக்கு விற்க நேர்ந்தது. அசலும் வட்டியும் முற்றுங் கொடுத்துக் கடனைத் தீர்த்தேன். வீட்டுச் சாப்பாட்டிற்குப் போதாமல் போயிற்று.

**பொன்னன்:** குடியானவன் இலேவாதேவிக் கடையில் கடன் வாங்கிஞல் கடைத்தேற முடியுமா?

**கந்தன்:** கடன் வாங்காமல் என்ன செய்வது? உழவு மாடு வாங்க வேண்டியிருந்தது. எரு மூட்டைக்குப் பணம் இல்லை. ஓர் உழவுச் சாலும் வாங்கினேன்.

**பொன்னன்:** இலேவாதேவிக் கடையில் உயர்ந்த வட்டிக்குக் கடன் வாங்கினதால் ஏற்பட்ட துன்பத்தைப் பார்த்தாயா? உன் உழைப்பின் கூலி உனக்கு கிட்டாமல் போய்விட்டதே.

**கந்தன்:** என்னிடத்திலோ முதல் தொகை இல்லாமற் போயிற்று. நிலத்தைத் தரிசாகப் போடலாமா? ஆகையால் கடன் வாங்கினேன். கால் வருஷக் கஞ்சிக்குக் கிடைத்தது. கடன் கொடுத்து உதவுவதற்கு எனக்கு வேறு யார் இருக்கிஞர்கள்?

**பொன்னன் :** தனிப்பட்ட ஒருவரிடம் நீ ஏன் கடன் கேட்க வேண்டும்? கூட்டுறவுச் சங்கத்தில் கேட்டிருக்கக் கூடாதா? அதனுல் உனக்கு இலாபம் உண்டே!

**கந்தன் :** கூட்டுறவுச் சங்கத்தில் நான் சேர வில்லே. தவிரவும் யாரிடத்தில் வாங்கினுலும் கடன் கடன் தானே? சங்கத்தில் வாங்குவதால் மட்டும் இலாபம் என்ன?

**பொன்னன் :** விவசாயிகளின் நன்மைக்காகவே அச்சங்கம் ஏற்பட்டிருக்கிறது. அரசியலாருடைய பொருளுதவியாலும், மேற்பார்வையாலும் அச்சங்கம் நடைபெறுகிறது. கூட்டுறவுச் சங்கத்தில் மிகக் குறைந்த வட்டிக்குக் கடன் கொடுத்து உதவு கிருர்கள்.

சிறு சிறு தொகைகளாகப் பல தவணைகளில் கடன் தொகையைச் செலுத்தித் தீர்க்கலாம். உனது உழைப்பின் பயனை நீ முற்றிலும் அடைவாய்; கடனும் சுலபமாக அடைபட்டு விடும்; நீயும் கஷ்டப் பட மாட்டாய்; சொத்திற்கும் அழிவு உண்டாகாது. இந்த வசதிகள் தனிப்பட்டவர்களிடம் கடன் வாங்கி ஞல் உண்டாகுமா? சேர்ந்தாற்போல் கடனைக் கொடுப்பது சிரமம் அல்லவா? கடன் தொல்லேயால் சில சமயங்களில் சொத்தையே இழந்து வருந்தவும் நேருகிறது.

**கந்தன் :** சங்கத்தின் உதவியைப் பற்றி இப் போதுதான் நான் தெரிந்துகொண்டேன். சங்கத்தின் பயனை அடைவதற்கு நான் என்ன செய்ய வேண்டும்? சங்கத்தால் வேறு நன்மைகளும் உண்டோ?

**பொன்னன்:** நாளைக்கே நீயும் பங்குத் தொகையைக் கட்டி ஓர் அங்கத்தினராகப் பதிவு செய்துகொள். தேவை ஏற்படும்போது கடன் விண்ணப்பம் செய்து கொள். உனக்கு அவர்கள் சுலப வட்டிக்குக் கடன் கொடுப்பார்கள்.

அது மட்டும் அன்று; கூட்டுறவுப் பண்டகசாலை ஒன்று இருக்கின்றது. உன்னிடம் அதிகமாயுள்ள தானியங்களை அவர்கள் நியாயமான விலை கொடுத்து வாங்கிக் கொள்வார்கள். உழவுக் கருவிகள், விதை, எரு இவைகள் உனக்கு வேண்டியிருந்தால் அவைகளையும் அவர்கள் நியாயமான விலைக்கு விற்பார்கள்.

**கந்தன்:** பொன்னு, வந்தனம். நான் அவ்வாறே செய்கிறேன்.

| | | |
|---|---|---|
| வசூல் | தொல்லை | தனிப்பட்டவர் |
| கிராக்கி | வந்தனம் | இலேவாதேவி |
| அசல் | வசதி | தொல்லை |
| வட்டி | உழவுச்சால் | சுலபவட்டி |
| தரிசு | கண்டுமுதல் | பண்டகசாலை |
| தவணை | முதல் தொகை | விண்ணப்பம் |
| பதிவு | விவசாயம் | அங்கத்தினர் |
| கடைத்தேற | பங்குத் தொகை | |

## பயிற்சி

(1) **கண்ணன் :—இது உயர்திணையில் ஓர் ஆணைக் குறிக்கிறது.**

**கண்ணகி :—இது உயர்திணையில் ஒரு பெண்ணைக் குறிக்கிறது.**

பையன்கள், பெண்கள் :—இச்சொற்கள் உயர் திணையில் பலரைக் குறிக்கின்றன.

மரம் :—இச் சொல் அஃறிணையில் ஒன்றைக் குறிக்கிறது.

மரங்கள் :—இச் சொல் அஃறிணையில் பல வற்றைக் குறிக்கிறது.

உயர்திணையில் ஓர் ஆணைக் குறிப்பது **ஆண்பால்.**
உயர்திணையில் ஒரு பெண்ணைக் குறிப்பது **பெண் பால்.**
உயர்திணையில் பலரைக் குறிப்பது **பலர்பால்.**
அஃறிணையில் ஒன்றைக் குறிப்பது **ஒன்றன்பால்.**
அஃறிணையில் பலவற்றைக் குறிப்பது **பலவின்பால்.**
இவ்வாறாகப் பால் ஐந்து வகைப்படும்.

## கேள்விகள்

1. கூட்டுறவுச் சங்கம் குடியானவருக்கு எவ்வாறு உதவுகிறது ?

2. தனிப்பட்டவர்களிடத்தில் கடன் வாங்குவதற்கும், சங்கத்தில் வாங்குவதற்கும் வேறுபாடு என்ன ?

3. கூட்டுறவுப் பண்டகசாலையால் குடிகள் எவ்வெவ் வகையில் உதவி பெறலாம் ?

# 13. உப்பு

"உப்பிட்டவரை உள்ளளவும் நினை" என்ற பழமொழியை நீங்கள் கேட்டிருப்பீர்கள். உப்பு என்ற சொல் இங்குப் பொதுவாக உணவைக் குறிக்கின்றது. சமையற் பொருள்கள் உப்பினால் சுவை கொள்கின்றன. "உப்பில்லாப் பண்டம் குப்பையிலே" என்பது பழமொழி. ஆகையால், உணவு அளித்தவரை என்ற பொருளில் 'உப்பிட்டவரை' என்று கூறப்படுகின்றது.

உணவுப் பொருள்களுள் மிகவும் மலிவானது உப்பு. உப்பு என்பது என்ன? அறுசுவைகளுள் உவர்ப்பு ஒன்று. உவர்ப்புச் சுவையே முற்றிலும் உடைய பொருள் உப்பு என்ற பெயரால் வழங்கப்படுகிறது. அது கடல் நீரில் விளைகின்றது. நீருடன் அது கலந்து கரைந்திருக்கிறது. கடல் நீரைப் பாத்திகளில் தேக்கி வைத்து, வெய்யிலில் காய வைப்பார்கள். அதிலுள்ள நீரெல்லாம் ஆவியாகப் போகும்; உப்புப் பொருள் மட்டும் அடியில் கட்டியாகப் படிந்து நிற்கும். இது செயற்கையில் உப்பெடுக்கும் முறை.

தென்னிந்தியாவில் வேதாரணியத்தின் கடற்கரையில் உப்புப்பொருள் மலைபோல் இயற்கையாகவே குவிந்திருக்கும். அவ்வாறு இயற்கையாகவே குவிந்திருப்பதை உப்பு விளைதல் என்பார்கள். நமது தேசத்தில் இராஜபுதனத்தில் சில ஏரிகளின் நீரிலிருந்து உப்பு எடுக்கப்படுகிறது. சிந்து நதிக் கரையில் சிலவிடங்களில் உப்புப் பாறைகள் காணப்

படுகின்றன. அவற்றிலிருந்தும் ஏராளமாக உப்பு எடுக்கிறார்கள். சில வனந்தரங்களிலும் உப்புப் பாறைகள் இருக்கின்றன. அவ்வனந்தரங்கள் ஒரு காலத்தில் கடல் பரப்பாக, இருந்திருக்கக்கூடும் என்று எண்ணப்படுகிறது. இவ்வாறாக உப்புப்பொருள் பல இடங்களிலிருந்தும் ஏராளமாகக் கிடைக்கின்றது.

சமையற் பொருள்களில் அளவாக உப்பை இடுவதால் அவைகளுக்குச் சுவை உண்டாகிறது; உப்பை மிகுதியாகப் போட்டு விட்டால் அவைகள் சுவை கெட்டு உண்பதற்கு உதவாமற் போகும். உடல் வளர்ச்சிக்கு உப்புச் சத்தும் இன்றியாமை யாதது.

இதுவரையில் கூறப்பட்டது சாதாரண உப்பு அல்லது கடலுப்பு எனப்படும். சாதாரண உப்பே மிகுதியாகக் கிடைப்பதும், உபயோகப்படுவதும் ஆகும். சில இடங்களில் மண்ணிலிருந்து சாதாரண உப்பு எடுக்கப்படுகிறது. உப்பு மண்ணை நீரிற் கரைத்து, வடிகட்டி அந்நீரைக் காய்ச்சினால் உப்புப் பொருள் கிடைக்கின்றது.

சாதாரண உப்பைத் தவிர வேறு பலவகை உப்புக்களும் உள. அவற்றுள் **இந்துப்பு** என்பது ஒன்று. அஃது மருந்துகளில் சேர்க்கப்படுகிறது. உப்பு வகைகள் சேர்ந்த மருந்துகள் வயிற்று வலியையும் மந்தத்தையும் போக்கும். ஒருவகையான உப்பு வெடிமருந்துகளில் சேர்க்கப்படுகிறது. அதற்கு **வெடியுப்பு** என்று பெயர்.

| | |
|---|---|
| உப்பிட்டவரை | இன்றியமையாதது |
| அளித்தவரை | சாதாரண |
| மலிவானது | வடிகட்டி |
| அறுசுவை | வயிற்றுவலி |
| விளைகின்றது | மந்தத்தை |
| வறுந்தரங்கள் | வெடியுப்பு |

கீழ்க்காணும் எதிர்ப்பதங்களைப் படி :—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| இட்டவர் | × | இடாதவர் | ஏராளமாக | × | குறைவாக |
| பழமொழி | × | புதுமொழி | சீரணம் | × | அசீரணம் |
| அளித்தவர் | × | அளிக்காதவர் | ஆக்குவது | × | அழிப்பது |
| செயற்கை | × | இயற்கை | | | |

## கேள்விகள்

1. உப்பைப் பற்றிய பழமொழிகள் யாவை ?
2. செயற்கையில் உப்பெடுக்கும் முறையைக் கூறுக.
3. நம் நாட்டில் உப்புக் கிடைக்கும் இடங்கள் யாவை ?
4. உப்பினால் ஏற்படும் நன்மைகள் என்ன ?



## 14. உடற் பயிற்சி

இவர்கள் உடற் பயிற்சி செய்கிறார்கள். உடற் பயிற்சி உடலுக்கு நலமும் பலமும் தரும். உடற் பயிற்சி செய்யாதவர்கள் உடல் மெலிவும், பலக் குறைவும் அடைவார்கள். உற்சாகமும், சுறுசுறுப்பும் அவர்களிடம் உண்டாகமாட்டா.

உடற் பயிற்சி செய்வதால் உறுப்புக்கள் வளர்ச்சியும் பலமும் அடையும்; இரத்தவோட்டம் செம்மைப் படும். வேலை செய்வதால் ஏற்படக்கூடிய உடல் தேய்வுகள் நிறைவு பெறும். உடற் பயிற்சி செய்து உடலைப் பாதுகாப்பவர் ஆரோக்கியமாகவும், நீண்ட நாளும் வாழ்வார்கள். அவர்கள் களிப்பாகவும் சுறுசுறுப்பாகவும் காணப்படுவார்கள்.

அதிகாலையும் மாலைநேரமும் உடற்பயிற்சிக்குத் தகுந்த நேரங்கள். பசியோடு இருக்கும்போதும், உண்ட வுடனும், களைப்பாக இருக்கும்போதும், உடற் பயிற்சி செய்யக்கூடாது. உடற் பயிற்சியை அளவாகவும் முறையாகவும் செய்யவேண்டும். உடற் பயிற்சி செய்பவர்கள் பலம் தரும் உணவுகளை உட்கொள்ள வேண்டும்.

உடற் பயிற்சியில் பற்பல வகைகள் உண்டு. அவரவர்களுடைய வயதிற்கும் தொழிலுக்கும் தக்கபடி உடற் பயிற்சிகளைச் செய்யவேண்டும். படத்தில் காட்டியபடி தண்டால், பஸ்கி, கரளா முதலியவை வாலிபர்களுக்கு ஏற்ற உடற் பயிற்சிகள். ஓட்டம், பந்து விளையாட்டு முதலியன பள்ளிக்கூட மாணவர் களுக்கு உரிய பயிற்சிகள். சிறு விளையாட்டுக்கள் சிறு பிள்ளைகளுக்குப் போதிய பயிற்சிகள். முதியவர் களுக்கும், மெலிந்தவர்களுக்கும் சிறிது நேரம் உலாவப் போவது உடற் பயிற்சியாகும்.

சில பிள்ளைகள் படிப்பிலேயே கருத்தைச் செலுத்துவார்கள்; ஆனால் உடற் பயிற்சிப் பாடம் என்றால் சும்மா உட்கார்ந்து கொள்வார்கள். அவ்வாறு செய்வது கூடாது. சுவர் இருந்தால்தான் சித்திரம் எழுதலாம். உடலானது பலம் பொருந்தியதாக இருந்தால்தான் ஊன்றிப்படிப்பதற்கு முடியும். ஆகை யால் மற்றப் பாடங்களைப் போலவே உடற் பயிற்சி யிலும் பிள்ளைகள் ஊக்கம் கொள்ள வேண்டும்.

சில பிள்ளைகள் உடற் பயிற்சியில் கருத்துடைய வர்களாக இருப்பார்கள்; பாடம் என்றால் பின்னே செல்வார்கள்; அதுவும் அறியாமையே ஆகும்.

கல்வியில்லாவிட்டால், உடல் பலத்தால் மட்டும் எடுத்த காரியங்களில் வெற்றி பெற முடியாது ; தொழில்களைச் செய்யவும் முடியாது. ஆகையால் படிப்பு, உடற் பயிற்சி ஆகிய இரண்டிலும் பிள்ளைகள் விருப்பங் கொள்ள வேண்டும்.

| | | |
|---|---|---|
| உடற் பயிற்சி | உடல் மெலிவு | பலக் குறைவு |
| இரத்த வோட்டம் | செம்மைப்படும் | உடல் தேய்வு |
| நிறைவு | களிப்பாக | முறையாக |
| தண்டால் | பஸ்கி | கரளா |
| வாலிபர் | கூடாத செய்கை | ஊன்றி |
| கருத்து | அறியாமை | வெற்றி |

## பயிற்சி

கோடிட்ட இடங்களில் சரியான வார்த்தைகளைச் சேர்த்துப் படி.

(1) தேகப் பயிற்சி உடலுக்கு ——— ———.
(2) உடற் பயிற்சி ——— தரும்.
(3) உடற் பயிற்சியை ——— செய்ய வேண்டும்.
(4) உடற் பயிற்சி ——— ——— அருந்தக் கூடாது.
(5) உடற் பயிற்சியால் பலவித ——— ———.

## கேள்விகள்

1. உடற் பயிற்சியால் ஏற்படும் நன்மைகள் என்னென்ன ?
2. உடற் பயிற்சியால் பலவகைகளைக் கூறு.
3. உடற் பயிற்சி செய்யாதவர்கள் எவ்வாறு இருப்பார்கள் ?



## 15. விடாமுயற்சி

மேலே காட்டியுள்ள படத்தில் இருந்து நாம் அறிபவைகளாவன :—

ஒரு மரத்தின் அடியில் ஒருவர் உட்கார்ந்திருக்கிருர். அவரைப் பார்த்தால் அவர் நன்ருக வாழ்ந்தவராகத் தெரிகிறது.

அவருக்கு எதிரில் ஒரு சிலந்திக்கூடு இருக்கிறது. அதை அவர் உற்றுப் பார்க்கிருர். அவர் ஏதோ சிந்திக்கிருர். அவருடைய வரலாற்றைப் பற்றி நாம் கவனிப்போம்.

### வரலாறு

படத்தில் காணப்படுபவர் ராபர்ட் புரூஸ் என்பவர். அவர் ஸ்காட்லந்து என்னும் தேசத்தை ஆண்ட ஓர்

அரசர். அக்காலத்தில் இங்கிலாந்தை முதலாம் எட்வர்டு என்னும் மன்னர் அரசாண்டு வந்தார். இரு வேந்தர்க்கும் பகை உண்டாகிப் போர் மூண்டது. புரூஸ் மன்னர் எட்வர்டு மன்னரால் ஆறு முறைகள் தோற்கடிக்கப்பட்டார். கடைசியாக அவர் நாட்டை இழந்து, காட்டிற்கு ஓடி ஒளிய நேர்ந்தது. அங்கே ஒருநாள் அவர் தனியே படத்தில் காட்டியபடி ஒரு மரத்தின் அடியில் உட்கார்ந்திருந்தார்.

அப்போது ஒரு சிலந்தி கூடு கட்டிக்கொண்டு இருந்தது. அக்கூடு அறுந்து அறுந்து போயிற்று. ஆறு தடவை அது முயன்றது ; ஆறு தடவைகளிலும் அதனுடைய முயற்சி வீணாயிற்று. ஆனால் அது தன்னுடைய முயற்சியில் ஊக்கம் குறையவில்லை. ஏழாவது தடவையும் முயன்றது. அப்போது அதன் முயற்சி பயனை அளித்தது ; சிலந்தியின் கூடு அறு படாமல் முடிவு பெற்றது.

அக் காட்சியைக் கண்ட புரூஸ் துணிவும் களிப்பும் கொண்டார். தாமும் ஏழாவது முறை போருக்குச் சென்றால், வெற்றி பெறக்கூடும் என்று எண்ணினார்.

அவ்வாறு இருக்கையில் அவருடைய பகைவராக இருந்த முதலாம் எட்வர்டு இறந்துபோனதாகக் கேள்விப்பட்டார். அவருடைய குமாரர் அவரைப் போல் போர்த்திறமை இல்லாதவர் எனவும் அறிந்தார் ; உடனே மீண்டும் ஒரு பெருஞ் சேனையைத் திரட்டிக் கொண்டு, தம்முடைய பகை மன்னரை எதிர்த்தார். அம்முறை அவர் தாம் எண்ணியவாறே வெற்றி பெற்றார். இழந்துபோன முடியை ராபர்ட் புரூஸ் மீண்டும் பெற்றார்.

"முயற்சி உடையார் இகழ்ச்சி அடையார்" என்னும் நீதி இவ்வரலாற்றிலிருந்து விளங்குகின்றது அன்றோ?

| | | |
|---|---|---|
| சிந்திக்கிறார் | வரலாறு | வேந்தர் |
| சிலந்தி | திறமை | பெருஞ்சேனை |
| திரட்டிக்கொண்டு | பகைமன்னர் | இழந்துபோன |
| முடி | மீண்டும் | வெற்றி |
| முயற்சி | இகழ்ச்சி | |

## பயிற்சி

பூச்சி, மனிதன்—இச்சொற்கள் ஓர் எண்ணைக் குறிக்கின்றன.

பூச்சிகள், மனிதர்கள்—இச்சொற்கள் ஒன்றிற்கு மேற்பட்ட எண்ணைக் குறிக்கின்றன.

ஓர் எண்ணைக் குறிப்பது ஒருமை எனப்படும். ஒன்றிற்கு மேற்பட்ட எண்ணைக் குறிப்பது **பன்மை** எனப்படும்.

2. இவற்றிற்குப் பன்மைக் கூறுக :
ஆடு, வேந்தன், நாடு, மன்னன்.
3. இவற்றிற்கு ஒருமை கூறுக :
ஊர்கள், போர்கள், கூடுகள், மரங்கள், நாட்கள்.

## கேள்விகள்

1. சிலந்தி எத்தனை தடவை கூடுகட்டிற்று? எத்தனை தடவை அறுந்துபோயிற்று? எந்தத் தடவையில் முடிந்தது?

2. புரூஸ் ஏன் காட்டிற்குச் செல்ல நேர்ந்தது?

3. சிலந்தியின் கதையைப் பார்த்ததும் அவர் என்ன எண்ணினார்?

4. அதனால் அவர் என்ன செய்தார்? என்ன முடிவு ஏற்பட்டது?

# 16. கைத்தொழில்

கைத்தொழில் ஒன்றைக் கற்றுக்கொள் ;
கவலை உனக்கில்லை ஒத்துக்கொள்.
எத்தொழில் எதுவும் தெரியாமல்
இருந்திடல் உனக்கே சரியாமோ ? (1)

உழவும் தொழிலும் இல்லாமல்
உலகில் ஒன்றும் செல்லாது.
விழவும் கலையும் விருந்துகளும்
வேறுள இன்பமும் இருந்திடுமோ ? (2)

நெசவுக் காரர்கள் நெய்யாமல்
நிலத்தவர் உடைக்கென் செய்வார்கள் ?
குசவன் செய்திடும் பாண்டமன்றோ
குடித்தனம் நடத்திட வேண்டுமென்றும். (3)

கொல்லரும் தச்சரும் கூடாமல்
கூடமும் மாடமும் வீடாமோ ?
கல்லடி சிற்பியும் தச்சருமே
காரியம் பலவினுக் கச்சாணி. (4)

சலவை சவரம் செய்தாலும்
சாக்கடை கழுவுதல் செய்தாலும்
உலகுக் கதனால் உபகாரம் ;
ஒன்றும் தெரியார் வெறும்பாரம். (5)

—இராமலிங்கம் பிள்ளை

# 17. குடிசைத் தொழில்

நம் இந்திய நாடு பல கிராமங்களால் ஆகியது. கிராமங்கள் தம் தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளும் நிலைமையில் இருந்தபொழுது, குடிசைத் தொழில்கள் மிக உயர்ந்த நிலையிலிருந்தன. கிராமங்களில் நவநாகரிகம் பெருகப் பெருகக் கிராமத்தினரும் நகரத்தார்போல் வாழ விரும்புகின்றனர். ஆகையினால் செய்யுந் தொழில்களில் சிறிது மாற்றம் ஏற்பட்டு உழைப்பு அதிகமில்லாத தொழில் தேடித் திரிகின்றனர்.

சில ஆண்டுகட்கு முன், குடிசைத் தொழில்கள் மிக உயரிய நிலையில் இருந்தன. நாட்டின் பொருளாதார நிலை குறையத் தொடங்கியவுடன், மனிதர்களுக்குப் பொருள் முட்டுப்பாடு ஏற்பட, இக் குடிசைத் தொழில்களில் அதிக வருவாய் கிடைக்கவில்லையென்று ஒதுக்கப்பட்டன. பின்னர் ஜப்பானும், ஜெர்மனியும் தம் நாட்டுக் குடிசைத் தொழிலை விருத்தி செய்யத் தொடங்கியதும், நம் நாடு அதைப் பின்பற்றத் தலைப்பட்டது. மேலும் காந்தியடிகள் இக் குடிசைத் தொழில்களைப்பற்றி இடைவிடாது சலிப்பின்றி மக்களுக்கு எடுத்துரைத்தார். அவற்றின் பயனால்தான் குடிசைத் தொழில் சிறிது சிறிதாக விருத்தி யடைந்துகொண்டே வருகிறது.

இக் குடிசைத் தொழில்களை இரு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று கலைத் தொழில்; மற்றொன்று கைத்தொழில். விளையாட்டுக் கருவி செய்தல், கல்லில் வடிவம் செய்தல், மண்பாண்டங்களுக்கு மெருகிடுதல் முதலியன கலைத்தொழில்கள் ஆகும்.

கிராமத்தில் பரம்பரையாகச் செய்யப்படும் கைத் தொழில்களாகிய தச்சுத் தொழில், இரும்புத் தொழில், பாய்முடைதல், நெசவு, மண்பாண்டத் தொழில் இவையாவும் குடிசைத் தொழில்களே. இவை தவிர தேனீ வளர்த்தல், பட்டு எடுத்தல், காகிதம் செய்தல் முதலியனவும் குடிசைத் தொழில்களே.

பயிர்த் தொழிலாளர் வருஷத்தில் ஆறு மாதந் தான் பயிர்த் தொழில் செய்கின்றனர். மற்றக் காலத் தில் ஒய்வு நேரத் தொழிலாக மாவு அரைத்தல், கயிறு திரித்தல், கோழி வளர்த்தல், ஆடு வளர்த்தல் முதலிய தொழில்களைச் செய்து ஊதியம் அடையலாம்.

இவைகளை முன்னேற்றமடையச் செய்வதற்கு ஊர்கள்தோறும் கூட்டுறவுச் சங்கங்கள் ஏற்படுத்திக் கடன் கொடுத்து உதவி, குடிசைத் தொழில்களை வளரச் செய்யவேண்டும். நம் நாட்டிலுள்ள கைத் தொழில் நிபுணர்களை அயல் நாடுகளுக்கு அனுப்பி அங்குச் செய்யப்படும் தொழில்களின் நுட்பங்கள், திறமை, வேலைப்பாடு முதலியவைகளைக் கற்றுக் கொண்டு வரும்படி செய்யவேண்டும். கற்றுக் கொண்டு வந்த பின்னர் அவைகளைச் செய்து காட் டற்கு இடவசதி, பொருள் வசதி, துணை வசதி முதலி யன தந்துதவ வேண்டும்.

பிள்ளைகள் படிக்குங் காலத்திலேயே அவர்களுக் குக் குடிசைத் தொழில்கள் கற்றுக் கொடுக்கப்பட வேண்டும். பிற்காலத்தில் பிள்ளைகள் படிப்பு முடிந்த வுடன் பிழைப்புக்கு வழியில்லையே யென்று திரியக் கூடாது. குடிசைத் தொழிலொன்று தொடங்கிப் பயன்பெற வேண்டும். நம் நாடும் செழிப்புற்று முன்னேற்றமடையும்.

| | |
|---|---|
| பின்பற்ற | ஓய்வுநேரத்தொழில் |
| சலிப்பின்றி | தலைதூக்க |
| விருத்தியடைந்து | நுட்பங்கள் |
| பரம்பரை | செழிப்புற்று |
| மண்பாண்டத்தொழில் | முன்னேற்றமடைய |

## பயிற்சி

உள்ளூரில் நடக்கும் ஏதாவது ஒரு குடிசைத் தொழிலைப்பற்றி உரையாடல்.

## கேள்விகள்

1. கிராமத்தார் ஏன் வேறு தொழில் தேடித் திரிகின்றனர்?

2. குடிசைத் தொழில் ஏன் முதலில் ஒதுக்கப்பட்டது?

3. பிறகு அது எவ்வாறு விருத்தியடைய ஆரம்பித்தது?

4. குடிசைத் தொழில்களை எத்தனை வகையாகப் பிரிக்கலாம்? ஒவ்வொன்றிற்கும் உதாரணங்கள் தருக.

5. இத்தொழில்களை முன்னேற்றமடையச் செய்ய வேண்டிய வழிகள் யாவை?

# 18. உல்லாசப் பிரயாணம்

ஒரு நாள் எங்கள் பள்ளிச் சிறுவர் சங்கத்தில் கோடைக்கால விடுமுறை , விடுவதற்கு முன்பு தென் நாட்டிலுள்ள குற்றால நீர் வீழ்ச்சிக்கு உல்லாசப் பிரயாணம் செல்ல முடிவு கட்டினோம். அப் பிரயாணத்திற்கு நான்காம் ஐந்தாம் வகுப்பு மாணவர்கள் மட்டும் செல்வதாக உறுதி செய்தோம். ஆசிரியர்களிடம் எங்கள் அவாவை அறிவித்தோம். அவர்களும் முழுமனத்துடன் இசைந்தார்கள். பின்னர் இவ்விரு வகுப்புகளிலும் வர விரும்பும் சிறுவர்களின் கையொப்பங்களை ஒரு தாளில் பெற்றோம். கையொப்பமிட்டவர்களின் தொகை நூற்றுக்கு மேலிருந்தது.

ஒரு குறிப்பிட்ட நாளில் புறப்பட ஏற்பாடு செய்தோம். நாங்கள் இரயில்வே கட்டணத்தை ஆசிரியர்களிடமே செலுத்தி விட்டோம். பிறகு எங்கள் ஆசிரியர்கள் திருச்சிராப்பள்ளிக் கூடல் நிலையம் (சந்தி) சென்று அங்குள்ள அதிகாரியிடம் கழிவுடன் கூடிய கட்டணம் செலுத்தித் தென்காசிக்குப் பிரயாணச்சீட்டுப் பெற்றனர் ; பிறகு இரயில் வண்டித் தொடரில் தனிவண்டி ஒன்றுக்கு உரிமைப் பதிவு செய்ய ஏற்பாடு செய்தனர்.

மாணவர்கள் ஒவ்வொருவரும் அவரவர்களுக்கு வேண்டிய வேட்டி, துண்டு, சட்டை முதலியவைகளுடன் குறிப்பிட்ட நேரத்தில் பள்ளிக்கு வர வேண்டும் என்று ஆசிரியர்கள் கட்டளையிட்டனர்.

அதே நாளில் மாணவர்கள் அனைவரும் பள்ளி மண்டபத்தில் குழுமினர் ; நாங்கள் வரிசை முறையிற்

சென்று நெய்யாவி (மோட்டார்) வண்டியில் ஏறி கூடல் நிலையம் சென்றோம். இரவு மூன்று மணிக்கு அங்கு வந்த திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் வண்டி ஏறி, மறு நாள் பகல் 2 மணி யளவில் தென்காசி நிலையத்தில் இறங்கினோம்; குற்றாலம் தென்காசிக்கருகில் உள்ளது. நடந்து போய் ஒரு மணி நேரத்தில் குற்றாலத்தை யடைந்தோம். பிறகு ஆசிரியர்கள் அங்குள்ள அற விடுதி (சத்திரம்) யொன்றைக் குடிக்கூலிக்குப் பேசி, இரண்டு நாள்காறும் உணவுக்கும் ஏற்பாடு செய்த னர். அவ்விடுதியில் இராப் பொழுதைக் கழிக்க நேர்ந்தது; விடியற்காலையில் எழுந்து, காலைக்கடனை முடித்துக் கொண்டு சிற்றுண்டி அருந்திய பிறகு மலைவளங்காண மகிழ்வுடன் புறப்பட்டோம்.

ஆசிரியர்களும் நாங்களும் ஆங்குள்ள கண் கவர் காட்சிகளைக் கண்டு மகிழ்ந்தோம். பிறகு நீர் வீழ்ச்சியினருகே வந்தோம்; அப்பொழுது ஆசிரியர் கள் இந்நீர்வீழ்ச்சி சுமார் எழுபது அடி உயரத்தி லிருந்து விழுகிறது என்று கூறினர்கள். அவ்விடத்தில் மெல்லெனத் தவழ்ந்து வரும் காற்றினாலும், குளிர்ந்த தன்மையினாலும், சுற்றுப்புறங்களின் இயற்கை வனப்பாலும் நாங்கள் அனைவரும் மெய்ம்மறந்து உவகைக் கடலில் மூழ்கினோம்; காலைக் கதிரவன் கிரணங்கள் நீரின் ஊடே ஒளிச்சிதறலால் நவமணிக ளென மிளிர்ந்தன; தென்காசி வரை எப்பொழுதும் சிறு தூறல் வானத்தில் இயங்கிக்கொண்டேயிருந்தது. இந்நீர்வீழ்ச்சிக்கு அருகில் திருக்குற்றால நாதர் கோயில் உள்ளது.

இவ்வருவி பொதிய மலையின் அடிவாரத்தில் விழுகிறது; அங்கிருந்து உயர ஏறிச் சென்று

பார்த்தால், இந்நீர்வீழ்ச்சி மற்றோர் இடத்திலிருந்து இறங்கி வருவதைக் காணலாம். அங்கே பல வெண்ணிறப் பறவை இனங்கள் அவ்வருவியின் மேல் பறந்து திரிகின்றன. இங்கே கீழிறங்கும் அருவிக்குத் தேனருவி என்று பெயர்.

மாந்தர் தங்கள் மனக் கவலைகளை மறந்து இயற்கை இன்பம் எய்த ஆண்டுக் கொருமுறை ஜூன், ஜூலை, ஆகஸ்டு மாதங்களில் இங்கே வந்து வசிக்கின்றனர். இந் நீர்வீழ்ச்சியில் மூழ்குபவர் நோய்கள் நீங்கப்பெற்று நலமெய்துவர் எனப் பலரும் கூறுகின்றனர்.

| | |
|---|---|
| இயற்கைக்காட்சி | விழுகிறது |
| மெய்ம்மறந்து | உரிமைப் பதிவு |
| உவகைக் கடல் | குழுமினர் |
| ஒளிச் சிதறல் | இராப்பொழுது |
| எளிதிலுணர்வர் | மூழ்குபவர் |
| திருக்குற்றாலநாதர் | பிரயாணச் சீட்டு |
| சிறுதூறல் | ஈடுபட்ட |
| நீர்வீழ்ச்சி | யாவரே ஆயினும் |
| கையொப்பம் | வசிக்கின்றனர் |
| கூடல் நிலையம் | எள்ளளவும் |

### பயிற்சி

1. நாங்கள் நூறுபேர் சேர்ந்து கொண்டு குற்றால மலைக்கு ஓர் உல்லாசப் பிரயாணம் சென்றோம்.

(1) நாங்கள் நூறுபேர் சேர்ந்தோம்.

(2) குற்றால மலைக்கு ஓர் உல்லாசப் பிரயாணம் சென்றோம்.

2. பின் வருபவைகளையும் மேற்கண்டபடி பிரித்துக் கூறு :

(1) இரவு மூன்று மணிக்கு அங்குவந்த திருவனந்த புரம் எக்ஸ்பிரஸ் வண்டியில் ஏறி, மறுநாள் பகல் 2 மணியளவில் தென் காசி நிலையத்தில் இறங்கினோம்.

(2) நாங்கள் ஒரு குறித்த நாளில் புறப்பட ஏற்பாடு செய்து இரயில்வே கட்டணத்தை ஆசிரியர் களிடமே செலுத்திவிட்டோம்.

**கேள்விகள்**

1. குற்றால நீர்வீழ்ச்சி எங்கே யிருக்கிறது ?
2. நீர்வீழ்ச்சி காணச் சென்றவர் எவற்றால் இன்பம் அடைவர் ?
3. தேனருவியை எங்கே காணலாம் ?
4. நீர்வீழ்ச்சியில் மூழ்குவதால் ஏற்படும் நன்மை யாது ?

## 19. எல்லாம் நன்மைக்கே

"எல்லாம் நன்மைக்கே" என்ற பழமொழியை நாம் எல்லோரும் கேட்டிருக்கிறோம். 'இயல்பாக ஏற்படுவனயாவும் நன்மைக்கே யாகும்' என்பது இதன் பொருள். சில சமயங்களில் சில சம்பவங்கள் தீயனவாகத் தோன்றும். அத்தீயனவும் ஒரு நன்மை யாகவே முடியும். இவ்வுண்மையை விளக்க ஒரு கதை வழங்குகிறது.

ஒரு நாள் ஓர் அரசனும், அவனுடைய அமைச் சனும் உல்லாசத் தோட்டத்தில் உலாவிக் கொண் டிருந்தார்கள். அவர்கள் வேடிக்கையாகப் பேசிக் கொண்டும், இயற்கையின் அழகுகளைக் கண்டு களித்

துக் கொண்டும் இருந்தார்கள். அவ்வாறு இருக்கையில் அரசனுடைய கால் ஒரு கல்லில் தற்செயலாக இடருற்றது. அதனால் அவனுடைய வலது பாதக் கட்டை விரல் ஊனமும் ஆயிற்று.

அப்போது அவன் அமைச்சனைப் பார்த்து, "மந்திரி, இன்று யார் முகத்தில் விழித்தேனோ? என் கால் கட்டை விரல் இவ்வாறு ஊனம் ஆயிற்றே"



என்று சொல்லி வருந்தினன். அது கேட்ட மந்திரி "எல்லாம் நன்மைக்கே" என்றான். அச்சொற்களைக் கேட்டதும் மன்னன் அவன்மீது சினம் கொண்டான். எரிகின்ற தீயில் எண்ணெய் ஊற்றியது போல் அவனுடைய உள்ளம் கொதித்தது. அக்கணமே வேந்தன் அம்மந்திரியைச் சிறையிலிட்டான்.

சிறை புகுந்த மந்திரி வருந்தவில்லை. அதுவும் நன்மைக்கே எனக் கொண்டான். இவ்வாறு சில

நாட்கள் கழிந்தன. பிறகு ஒரு நாள் அரசன் வேட்டையாடுவதற்காகக் காட்டிற்குச் சென்றான். அவனுடைய பரிவாரத்திற் சிலரும் கூடச் சென்றார்கள். வேட்டையில் அவன் மிக்க விருப்பம் உடையவன்; ஒரு விலங்கை விரட்டிக் கொண்டே தனியே அக்காட்டில் வெகு தூரம் சென்றுவிட்டான். உடன் சென்றவர்கள் அவனைப் பின் தொடராமல் நின்றுவிட்டார்கள்.

கடைசியாக அவன் களைத்துப்போய் ஒரு மரத்தின் கீழ் தங்கி விட்டான்; சுற்றிலும் பார்த்துக் கலங்கினான். அதற்குள் மாலைப் போதும் நெருங்கிற்று. திரும்பிச் செல்வதற்கும் அவனுக்கு வழி தெரியவில்லை. விடியும் வரையில் அங்கேயே கண் மூடாமல் உட்கார்ந்திருந்தான்.

பொழுது விடிந்ததும் எங்கிருந்தோ சில கொடியவர்கள் அங்கு வந்தார்கள். தனியே இருந்த மன்னவனை அவர்கள் கண்டார்கள். அவனை இன்னான் என்று அவர்கள் அறிந்திலர். அம்மூடர்கள் காளி தேவிக்குப் பலி கொடுப்பதற்காக அவனைக் கொண்டு செல்ல எண்ணினார்கள்; அருகில் சென்று அவனை உற்று நோக்கினார்கள்; அவன் கால் விரல்களுள் ஒன்று இல்லாமையைக் கண்ணுற்றார்கள். "ஊனமுற்ற இவன் பலிக்கு உதவான்" என்று சொல்லி விட்டுப் போய்விட்டார்கள். காளிதேவியே தன்னைக் காப்பாற்றினாள் என்று காவலன் எண்ணினான்.

சிறிது நேரத்தில், பரிவாரத்தைச் சேர்ந்தவர்கள் அவனைக் கண்டுபிடித்து அரண்மனைக்கு அழைத்துச் சென்றார்கள். அமைச்சர் அன்று சொல்லிய வார்த்

தைகள் அரசன் நினைவிற்கு வந்தன. அரசன் தான் அறியாமற் செய்த பிழையை எண்ணினான்; அமைச்சனை விடுவித்தான். சிறையிலிருந்து விடுவிக்கப்பெற்ற அமைச்சன் அரசனைக் கண்டு வணங்கினான். அரசன் வெட்கித் தலைகுனிந்தவாறே "அமைச்சரே, நீர் கூறிய சொல் உண்மையாயிற்று. அன்று என் கால் ஊனமாகாமல் இருந்திருந்தால், நான் கொடியவர்களால் கொலை செய்யப்பட்டிருப்பேன். ஆயினும் எனக்கு மற்றோர் ஐயமும் எழுகின்றது. சிறை சென்றதும் இயல்பாக நிகழ்ந்தது அன்றோ? அது உமக்கும் நன்மையாக வேண்டுமே" என்றான்.

அவ்வுரையைக் கேட்ட மந்திரி மகிழ்ச்சியுடன் "மன்னர்பிரானே, நான் சிறைசெய்யப் படாமல் இருந்திருந்தால், நேற்று நான் தங்களுடன் வந்திருப்பேன். தங்களை அணுகிய அக் கொடியவர்கள் என்னைக் கொண்டு சென்று காளியின் முன்னர் கொன்றிருப்பார்கள். சிறை செய்யப்பட்டதால் நான் உயிர் பிழைத்தேன்" என்றான்.

மந்திரியின் மதியைக் கண்டு மன்னன் அவனைப் பலவாறு புகழ்ந்தான்.

| | | |
|---|---|---|
| இயல்பாக | சம்பவம் | அமைச்சன் |
| களித்துக்கொண்டு | இடறுற்றது | பிழை |
| அணுகிய | ஊனம் | சிறை |
| கொண்டுசென்று | நிகழ்ந்தது | பலி |
| கலங்கினான் | கண்ணுற்றார்கள் | காவலன் |
| பரிவாரம் | பின்தொடராமல் | வேந்தன் |

### பயிற்சி

அவர்கள் அங்கே வந்தார்கள்.
அவர்கள் அங்கே வருகிறார்கள்.
அவர்கள் அங்கே வருவார்கள்.

பின்வரும் வாக்கியங்களை மேலே கண்டமாதிரி எழுதுக :—

1. பையன்கள் மரத்தை உற்று நோக்கினார்கள்.
2. காவலன் பலவாறு எண்ணுகிறான்.
3. சிலரும் கூடச் செல்வார்கள்.

### கேள்விகள்

1. உல்லாசத் தோட்டத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் கூறு.
2. மந்திரி ஏன் சிறை செய்யப்பட்டான்?
3. மந்திரி சொல்லியது எவ்வாறு உண்மையாயிற்று?

## 20. நல்ல இடம்

**சிநேகிதர் :** நண்பரே, ஏன் இவ்வாறு மெலிந்து காண்கின்றீர்? நோய்வாய்ப்பட்டு வருந்துகின்றீரே. நோய்க்கு இடம் கொடுக்கலாமா?

**வீட்டுக்காரர் :** இந்த வீடுகட்டிய வேளை நல்லது அன்று; அதனால்தான் எனக்கு நோய் வந்து விட்டது. சொந்த வீடு வேண்டுமென்று விருப்ப முடன் கட்டினேன். இவ்வீட்டில் குடி புகுந்ததி லிருந்து, நாள் தப்பினாலும் வியாதி தப்புவதில்லை.

**சிநேகிதர் :** வீடு கட்டிய வேளையாவது? வியாதியாவது? வேளையிற் குற்றமில்லை. கட்டிய முறையில்தான் குறை.

**வீட்டுக்காரர் :** கட்டிய முறையில் குறை என்ன இருக்கிறது? அழகாயும், உறுதியாகவும் கட்டியிருக்கின்றேன். இந்தக் கட்டடத்திற்கும், என்னுடைய நோய்க்கும் ,என்ன சம்பந்தம்? வேளை தான் பொல்லாததாய் இருக்கின்றது.



**சிநேகிதர் :** நண்பரே, நீர் கூறுவது பொருந்தாது. நோய்கள் உண்டாவதற்குக் குடியிருக்கும் இடமே முதற்காரணம். உம்முடைய வீடு புருக்கூடு போல் அமைந்திருக்கிறது. காற்றோட்டத்திற்குச் சிறிதேனும் வழி இருக்கின்றதா? இவ்வளவு பள்ளத்திலா வீட்டைக் கட்டுவது? தரை எப்போதும் ஈரமாக இருக்கின்றதே. நடமாடும் இடம் சதுப்பு நிலமாக இருக்கலாமா? குப்பை, கூளங்களை இவ்வளவு அருகிலா போடுவது?

மாட்டுக் கொட்டத்தைப் பக்கத்தில் அமைக்கலாமா? வீட்டின் பக்கத்தில் வந்தாலே துர்நாற்றம் வீசுகின்றது. உள்ளே புகுந்து பார்த்தால் இருட்டாக இருக்கின்றது. சூரிய வெளிச்சத்திற்கு வழியில்லை. சூரிய வெளிச்சம் பரவாத வீடு கண்ணில்லாத உடலைப் போலும். சுவர்களில் நேருக்கு நேராக ஜன்னல்களை அமைக்க வேண்டாமா? உள்ளே இருக்கும் காற்று வெளியே போகவேண்டும். வெளியே உள்ள காற்று உள்ளே பரவ வேண்டும். ஜன்னல் இல்லாத வீடு என்ன வீடு? தரைக்கு நல்ல தளவரிசை போடக் கூடாதா? எங்கும் குழிகளாக இருக்கின்றனவே. அவைகளில் குப்பை தங்குமே.

குடியிருக்கும் வீடு இவ்வாறு இருந்தால் குடியிருப்பவர்களுக்கு எவ்வாறு ஆரோக்கியம் உண்டாகும்? இவற்றை எல்லாம் சிந்திக்காமல் 'நோய்க்குக் காரணம் வேளை' என்கின்றீரே.

**வீட்டுக்காரர் :** நீர் சொல்வன உண்மைதான். இவைகளை எல்லாம் நான் முன்னமே அறியாமற் போனேன். அப்போது எனக்கு எடுத்துச் சொல்வோர் ஒருவரும் இருந்திலர். இனி என் செய்வது?

**சிநேகிதர் :** வீட்டைக் கட்டத் தொடங்குவதற்கு முன் சுகாதார அதிகாரிகளுக்குத் தெரிவிக்க வேண்டும். கட்டப் போகும் வீட்டின் படத்தை வரைந்து அவர்களுக்கு அனுப்ப வேண்டும். அவர்கள் நேரில் வந்து இடத்தைப் பார்வையிடுவார்கள். கட்ட வேண்டிய திட்டத்தில், சுகாதார முறையி ஆலோசனை கூறுவார்கள். சுகாதார முறைப்படி கட்டப்பட்ட வீட்டில் நோய்கள் புகமாட்டா. குடியிருப்பவர்கள் ஆரோக்கியமாக வாழ்வார்கள்.

‘ இனி என்ன செய்வது ?’ என்று கேட்கின்றீர். வாடகை வீடாக இருந்தால் வேறு நல்ல வீட்டிற்குக் குடி. போகலாம். இது சொந்த வீடு அல்லவா ? வீட்டைத் திருத்தியமைப்பதே சரி.

**வீட்டுக்காரர் :** கட்டின வீட்டைத் திருத்தி யமைப்பது எவ்வாறு ?

**சிநேகிதர் :** முதலில் சுற்றுப்புறத் தரையைச் சமமாகவும், மேடாகவும் செய்ய வேண்டும். மாட்டுக் கொட்டத்தைச் சிறிது தூரத்தில் தனியாக அமைக்க வேண்டும். குப்பை கூளங்களைக் கொட்டுவதற்காக அப்பால் ஒரு குழியைத் தோண்டி வைக்கவேண்டும். மேல் கூரையைப் பிரித்துவிட்டு, நாலுபக்கச் சுவர் களையும் இன்னும் உயரமாக எழுப்ப வேண்டும். கதவு நிலைகளை ஆறடி உயரத்தில் அதற் கேற்ற அகலம் உள்ளவைகளாக அமைக்க வேண்டும். எல்லாப் பக்கங்களிலும் நேருக்கு நேர் ஜன்னல்களை வைக்க வேண்டும். பிறகு மேல் கூரையைச் செவ் வையாக வேய்ந்து நல்ல தளவரிசை போடவேண்டும். சூரிய வெளிச்சம் வீட்டினுள் புகும்படி முற்றம் இருப்பதும் நல்லது. நோயற்ற வாழ்வு அன்றோ குறைவற்ற செல்வம். ஆகையால், நோய்க்கு இடங் கொடுக்காமல் வாழவேண்டும்.

**வீட்டுக்காரர் :** நீர் கூறிய நல்லுரைகளைக் கேட்டு மகிழ்ச்சி அடைகின்றேன். வீட்டைத் திருத்தி யமைப்பது பற்றி இன்றே நான் சுகாதார அதிகாரி களுக்கு விண்ணப்பம் செய்து கொள்கிறேன்.

| | | |
|---|---|---|
| வேளை | மெலிந்து | நோய்வாய்ப்பட்டு |
| உறுதி | பொல்லாததாய் | பொருந்தாது |
| துர்நாற்றம் | தளவரிசை | சிந்திக்காமல் |
| திட்டம் | ஆலோசனை | புகமாட்டா |
| திருத்தி | அப்பால் | விண்ணப்பம் |

## பயிற்சி

நல்ல இடத்தில் வீடு கட்டவேண்டும். வசிப்பவர்கள் ஆரோக்கியமாக வாழ்வார்கள்.

நல்ல இடத்தில் வீட்டைக் கட்டினால் வசிப்பவர்கள் ஆரோக்கியமாக வாழ்வார்கள்.

இம்மாதிரியே கீழ்க்கண்டவைகளையும் மாற்றுக.

(1) இந்த வீடு பள்ளத்தாக்கில் கட்டப்பட்டிருக்கிறது. இது சுகாதாரத்திற்குக் கெடுதலானது.

(2) இது சொந்த வீடு. இதைத் திருத்தியமைக்க வேண்டும்.

## கேள்விகள்

1. சூரிய வெளிச்சம் இல்லாத வீடு எதைப் போலாகும்?

2. வீட்டைக் கட்டுவதற்கு முன் யாருக்குத் தெரிவிக்கவேண்டும்? அவர்கள் என்ன செய்வார்கள்?

3. வீட்டைக் கட்டும்போது கவனிக்க வேண்டிய விதிகள் யாவை?

# 21. விலங்குகள்

விலங்கு, மிருகம் என்பன ஒரு பொருட் சொற்கள். மிருகங்கள் எல்லாம் நான்கு கால்களும், ஒரு வாலும் உடையன; குட்டிபோட்டுப் பால் கொடுப்பன. அவை குறுக்கே வளரும் தன்மை உடையவை. ஆகையால் 'விலங்கு' என்ற பெயர் அவைகளுக்கு வழங்கலாயிற்று. விலங்கு என்ற சொல்லிற்குக் குறுக்கே வளர்வது என்பது பொருளாகும்.

பொதுவாக, விலங்கினங்கள் மாமிச பக்ஷணிகள், சாக பக்ஷணிகள் என்று இரு வகையாகப் பிரிக்கப்படும். மாமிச பக்ஷணிகள் என்பன பிற உயிர்களின் இறைச்சியைத் தின்று வாழ்வன. சிங்கம், புலி, கரடி, ஓநாய், நாய், பூனை முதலியன இவ்வினத்தைச் சேர்ந்தவை. சாக பக்ஷணிகள் என்பன இறைச்சியைத் தின்னமாட்டா. புல், பூண்டு, காய், கனி, இலை, தழைகள் அவைகளுக்கு உணவாகும். வேழம், குதிரை, ஆடு, மாடு, மான், ஒட்டகம், குரங்கு முதலியன இப் பிரிவைச் சேர்ந்தவை.

சாக பக்ஷணிகளுள் அசைபோடுவன, அசை போடாதன என்று இருபிரிவுகள் உண்டு. ஆடு, மாடு, மான், ஒட்டகம் இவை அசை போடும் பிராணிகள். குதிரையினமும், வேழமும் அசை போடாத வகுப்பைச் சேர்ந்தவை. அசை போடும் விலங்குகளுக்குப் பிளவுபட்ட குளம்புகளும், அசை போடாதவைகளுக்கு ஒற்றைக் குளம்புகளும் அமைந்திருக்கின்றன.

பண்பு வகையாலும் மிருகங்களை இரு வகை யாகப் பிரித்துக் கூறுவர். அவற்றுள் சிங்கம், புலி, கரடி, ஓநாய் முதலிய கொடிய மிருகங்கள் ஒரு வகை. இவை துஷ்ட மிருகங்கள் என்றும் சொல்லப் படும். துஷ்ட மிருகங்கள் எல்லாம் காட்டிலே வாழ் வன. அவை மனிதரிடத்தில் நன்றியுடன் பழகும் பண்புடையன அல்ல. குதிரை, ஆடு, மாடு, நாய் இவைகள் மனிதரிடத்தில் எளிதில் பழகும்; தம்மை வளர்ப்பவரிடத்தில் நன்றியுடன் உழைக்கும் குணமும் இவைகளுக்கு உண்டு. இம்மிருகங்கள் மனிதர்களுக் குப் பயன்படுவனவும் ஆகும்.

குதிரை ஒரு கம்பீரமான மிருகம். அது ஒரு சிறந்த வாகனமாகும். போர்களிலும் அது வீரர் களைச் சுமந்து கொண்டு, எதிரிகளின் படைகளைக் கண்டு அஞ்சாமல், தலைவன் ஏவுகின்றபடி பாய்ந்து ஓடும். மனிதர்களுக்கு உழைக்கும் மிருகங்களுள் மாடு மிக முக்கியமானது. எருதுகள் ஏர் உழவும், ஏற்றம் இறைக்கவும், செக்கு இழுக்கவும் பெரும் பாலும் பயன்படுகின்றன; பாரவண்டிகளிலும், சவாரி வண்டிகளிலும் பூட்டப் படுகின்றன. பசுக்கள் இனிய பாலைக் கொடுத்து உதவுகின்றன. ஆடுகள் ஏழைகளுக்கு ஓர் செல்வமாகும். ஆட்டுப்பால் மனிதர்களுக்கு ஓர் உணவுப் பொருளாகும். அதன் இறைச்சியையும் பலர் உண்கிறார்கள். அதன் உரோமங்களால் கம்பளங்கள் நெய்யப் படுகின்றன. அதனுடைய தோலும் பலவாறு உபயோகப் படுகிறது.

நாய் நன்றியுடைய பிராணி. காவல் காப்பதற்காக மனிதர்கள் நாய்களை வளர்க்கிறார்கள். வேழம் காட்டில் வாழ்வது. அது கொடிய விலங்குகளின் இனத்தைச்

சேர்ந்தது; எனினும் மனிதர்களிடத்தில் பழகும் இயல்புடையது. மலைக்காடுகளில் இருந்து பருத்த மரங்களைக் கீழே கொணர்தல் முதலிய அரிய வேலைகளை அது செய்யும். கோயில்களில் அழகுக்காகவும் யானைகளை வளர்க்கிறார்கள். முற்காலத்தில் படைகளிலும் யானைகள் உதவி வந்தன. யானைப்படை நால்வகைப்படைகளுள் ஒன்றாக இருந்து வந்தது.

இக்காலத்தில் சர்க்கஸ்காரர்கள் சிங்கம், புலிகளையும் அடக்கிப் பல வித்தைகள் செய்விக்கிறார்கள். மனிதனுடைய ஆற்றல் எவ்வளவு அரிது! "கரடி வெம்புலி வாயையும் கட்டலாம், ஒருசிங்கம் முதுகின் மேல் கொள்ளலாம்" என்று தாயுமானவரும் பாடியிருக்கிறார். ஆகவே இவ்வாற்றல் பண்டு முதற்கொண்டே நம் நாட்டில் உண்டு என்று தெரிகிறது. உபயோகமுள்ள மிருகங்களை வளர்ப்பதும், நாட்டிற்கு இன்னல் செய்யும் கொடிய விலங்குகளை வேட்டையாடி ஒழிப்பதும் நம் முன்னோர்களின் வழக்கமாகும். நமக்கு உதவுவனவாகிய கால்நடைகளை வளர்த்துப் பெருக்குவது இக்காலத்திலும் ஒரு சிறந்த தொழிலாகக் கொள்ளப்படுகிறது. கால்நடைப் பண்ணைகள் பல விடங்களிற் கூட்டுறவு முறைகளில் நடத்தப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| விலங்கு | பிளவு | சாகபக்ஷணி |
| வேழம் | படை | மாமிசபக்ஷணி |
| குளம்பு | பண்பு | துஷ்டமிருகம் |
| ஆற்றல் | வீரர்களை | சர்க்கஸ் காரர்கள் |
| இயல்பு | அஞ்சாமல் | பண்டுமுதல் |
| வேட்டை | கொணர்தல் | கூட்டுறவு முறை |
| இன்னல் | வெம்புலி | கால்நடைப் பண்ணை |

### பயிற்சி

#### வரிசைப் படுத்தி எழுது

| | |
|---|---|
| கொடிய மிருகங்கள் | மிருகங்களை வளர்க்க வேண்டும். |
| இறைச்சியைத் தின்பவை | விலங்கு எனப்படும். |
| நமக்கு உபயோகமுள்ள | மாமிச பக்ஷிணிகள். |
| இவைகள் குறுக்கே வளர்வதால் | மனிதரிடம்பழகமாட்டா. |

#### கேள்விகள்

1. விலங்கு என்ற சொல்லிற்குப் பொருள் யாது?
2. சாக பக்ஷிணிகளில் இரண்டு கூறு. மாமிச பக்ஷிணிகளில் இரண்டு கூறு.
3. மனிதர்களுக்கு உதவும் விலங்குகள் யாவை?
4. மனிதரிடம் பழகும் குணமுடைய கொடிய மிருகம் யாது? அது எவ்வெவ் வகையில் உதவுகிறது?

## 22. இரு பெரும் கவிஞர்கள்

"புலவர்கள் மலிந்தது நம் நாடு. வீரர்கள் விளங்கப் பெற்றது நம்நாடு. கவிஞர்களைப் பெற்றது நம் நாடு," என்று பெரியோர்கள் போற்றுவதை நீங்கள் அறிவீர்கள். பண்டைக் காலத்திலிருந்து எக்காலத்திலும் நம் நாட்டில் புலவர்களுக்குக் குறைவேயில்லை. புலவர்களுள் பெரும்பாலோர் கவிஞர்களும் ஆவர். கவிஞர்கள் தூய உள்ளமும், அஞ்சா நெஞ்சமும் உடையவர்கள். இடுக்கண்களைக் கண்டு அவர்கள் ஒருபோதும் அஞ்சார். சீரிய பண்புகளுக்கு அவர்கள் எடுத்துக்காட்டாக விளங்கு வார்கள். நாட்டினர்க்கு வீரத்தை ஊட்டி, அவர்களைச் சிறக்கச் செய்வது அவர்களுடைய நோக்கம். அவர் களும் சாலச் சிறந்த வீரர்களே ஆவர்.

இவ்வாறு உயர் வாழ்வு எய்திய புலவர்கள் எண்ணிறந்தோர் நம் நாட்டில் உண்டு. அவர்களுள் அண்மையில் வாழ்ந்தவர் சுப்பிரமணிய பாரதியார் என்பவர். பாரதியாரை அறியாதவர் தமிழகத்தில் இரார்.



தமிழகத்தில் பாண்டிய நாட்டைச் சேர்ந்த எட்டயபுரம் என்னும் பதியில் பாரதியார் பிறந்தார். தமிழ், ஆரியம், ஆங்கிலம் ஆகிய மும்மொழிகளில் அவர் தேர்ச்சி உடையவர்; இளமையிலிருந்தே தமிழில் கவி பாடும் திறமை உடையவர்.

தமது புலமையை அவர் நாட்டிற்கே பயன்படுத்தினர். அக்காலத்தில் நம் நாடு ஆங்கிலேயருடைய ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. அன்னியர் ஆட்சியை அறிஞர் விரும்புவாரோ ? இந்தியத் தாயை அன்னிய

ரிடமிருந்து விடுவிப்பதே இந்தியர்களின் கடமை என்பதை எடுத்தோதினர். அடிமைகளாகவும், பாமரராகவும் வாழ்வது ஆண்மையல்லவென்று விளக்கினர்; தேசீய கீதங்கள் பல இயற்றினர்; அவற்றின் மூலமாகத் தமது கொள்கைகளைப் பரவச்செய்தார்.

இசையென்றல் எவரும் விரும்புவர் அன்றே? வீரம் பொங்கும் பாக்களைத் தமிழ் மக்கள் அவாவுடன் ஓதினர்கள். ஒவ்வொருவரிடமும் பாரதியாரே நேரில் நின்று கூறுவதுபோல் அப்பாக்கள் பயன் அளித்தன. எல்லோருக்கும் சுதந்திர தாகம் ஏற்பட்டது. இடைக் காலத்தில் மறைந்திருந்த தேசீய உணர்ச்சி தழைத்தது. பாரதியாரின் வேட்கை வீணுகவில்லை. அவர் அகால மரணம் அடைந்தார். அவருடைய உடல் மறைந்தது. எனினும், அவர் பறைசாற்றிய பொன்னுரைகள் தமிழர் உள்ளத்திலிருந்து மறையவில்லை. பிற்காலத்தில் இந்தியத்தாய் விடுதலை பெற்ருள்.

பாரதியாரின் நாமத்தை நாம் எல்லோரும் போற்றுகிறோம். எட்டயபுரத்தில் அவருடைய ஞாபகார்த்தமாக மணிமண்டபம் ஒன்று கட்டப்பெற்றுள்ளது. ஆண்டு தோறும் பாரதியார் விழா நாடெங்கும் கொண்டாடப் படுகின்றது.

குடியரசு இந்தியாவில் பாரதியார் உயிருடன் இருந்திருப்பாராகில், நாட்டில் அவர் எய்தும் உயர்வுகள் பலவாகும்.

பாரதியாரைப் போன்றே இனிய செந்தமிழ்ப் பாக்களால் தேசபக்தியைப் பரப்பும் பேராற்றல் படைத்த மற்றெரு கவிஞரை இப்போது நாம் பெற்றுள்ளோம். அவர் பெயர் இராமலிங்கப்பிள்ளை

என்பது. நாமக்கல் கவிஞர் என்னும் சிறப்புப் பெயரால் அவர் நாமம் விளங்குகின்றது.

எளிய நடையில் இனிய சொற்களால் இயற்றப் பெற்ற பாக்களால் சீரிய கருத்துக்களை இளைஞர்களும்



அறியுமாறு விளங்கப்பாடும் கவிஞர் அவர். தேசீய சர்க்கார் தேசீய கவியைப் போற்றுமல் இருப்பாரோ? 'ஆஸ்தான கவி' என்ற பட்டத்தை அவருக்கு அளித்தனர். அப் பெயரே இப்போது அவருக்கு எங்கும் வழங்குகிறது.

தமிழ்ப் புலமையேயன்றி ஓவியத் துறையிலும் அவர் தேர்ச்சியுடையவர். ஓவியத்துறையில் வல்லவர்கள் உயர்ந்த கருத்துக்களைச் சித்திரத்தால் விளக்குவார்கள். கவிஞர்கள் அக்கருத்துக்களைக் கவிகளில் கற்பனை செய்து காட்டுவர். இருவகையாற்றலும் உடையவர் நாமக்கல் கவிஞர். எனின் அவருடைய பெருமையை விளக்கவும் வேண்டுமா?

நாமக்கல் கவிஞர் நீடுநாள் நன்றே வாழ்ந்து நமக்கு அறிவுரைகள் பல அளிப்பாராக.

| | | |
|---|---|---|
| மலிந்தது | கவிஞர் | பெரும்பாலோர் |
| உள்ளம் | இடுக்கண் | எடுத்துக்காட்டு |
| நெஞ்சம் | எய்திய | அன்னியர் |
| வீரம் | விடுவிப்பது | இந்தியத்தாய் |
| வேட்கை | பாமரர் | தேசீயகீதம் |
| அகாலம் | பறைசாற்றிய | பொன்னுரை |
| தேசபக்தி | மணிமண்டபம் | ஞாபகார்த்தம் |
| யாத்தல் | பேராற்றல் | வழங்கப்படுகிறது |
| கற்பனை | ஓவியம் | நீடுநாள் |

## பயிற்சி

உங்கள் பள்ளிக்கூடத்தில் 'பாரதியார் விழா' கொண்டாடுவதாக ஏற்பாடு செய்யப்படுகிறது. அதை எப்படிக் கொண்டாடுவது என்று சில வாக்கியங்களில் கூறு.

## கேள்விகள்

1. கவிஞர்களின் பண்புகள் யாவை?
2. பாரதியார் விளக்கிய உண்மைகள் யாவை?
3. நமது ஆஸ்தான கவி யார்?
4. நாமக்கல் கவிஞரின் பாக்கள் எத்தகையவை?

# 23. கால்நடைப் பண்ணை

ஆடு, மாடுகளுக்குக் கால்நடைகள் என்று பெயர். கால்நடைகள் மனிதர்களுக்கு இன்றியமை யாதவையும், உபயோகமுள்ளவையும் ஆகும். ஆகை யால் ஆடு மாடுகளை வளர்ப்பது என்ற வழக்கம் பெரும்பாலான வீடுகளில் இருந்து வருகின்றது. முற் காலத்தில் ஒவ்வொரு வீட்டிலும் மாடு வைத்துக் கொண்டிருந்தார்கள். ஏழைக் குடியானவர்கள் அநேகமாக ஆடுகளை வளர்க்கின்றனர்கள்.

இக் காலத்தில் கிராமங்களில் ஆடு, மாடுகளை வளர்ப்பது ஒருவாறு செய்யக்கூடியதாக இருக்கிறது. என்றாலும் அங்கும் புல்வெளி வசதிகள் போதுமான அளவு இல்லையென்றே சொல்ல வேண்டும். நகரங் களில் மாடுகளை வளர்ப்பதில் அதிகச் செலவு ஏற்படு கிறது; ஆடுகள் மேய்வதற்கும் இடங்கள் காணப் படமாட்டா.

பால் கொடுப்பதற்கும், உழைப்பதற்கும் மிக இன்றியமையாதனவாகிய மாட்டினங்களை எங்கும் வளர்க்க வேண்டும். மோட்டார் வண்டிகளும், இர யில் வண்டிகளும் எவ்வளவுதான் பெருகின போதி லும், மாட்டு வண்டிகள் இல்லாவிட்டால் நம்முடைய வேலைகள் நடைபெற மாட்டா. பசுக்கள் செழிப்பாக இல்லாவிட்டால் நமது உணவு வகைகளுள் முக்கிய அம்சமாகிய பால், தயிர், வெண்ணெய், நெய் இவை கிடைக்குமா?

பசுக் காத்தல் என்பதை நம் முன்னோர்கள் கடமையாகக் கொண்டிருந்தார்கள். இப்போது வசதிக் குறைவால் பலர் அவைகளை வளர்க்க முடிய

வில்லை. ஆகையால் கூட்டுறவுப் பண்ணைகள் ஏற்பாடு செய்து, அங்கு அவைகளை வளர்க்கிறார்கள். கூட்டுறவுப் பண்ணைகளில் எருதுகளும், பசுக்களும் நல்லவாறு உணவளிக்கப்படுகின்றன; சுகாதார முறையில் வளர்க்கப்படுகின்றன. முக்கியமாகப் பசுக்களை வெகு கருத்துடன் கவனிக்கிறார்கள். சுகாதார முறையில் பசும்பாலை மற்றவர்களுக்கு விற்கிறார்கள். ஒவ்வொருவரும் தனித்தனியாக முதல் போட்டு மாடுகளை வளர்ப்பதில் அதிகச் செலவும், சிரமும் ஏற்படக் கூடும். கூட்டுறவு முறைகளில் பண்ணைகளை ஏற்படுத்தி அவைகளை வளர்ப்பது ஒருவாறு சுலபமாகும். ஆதலால் லாபமும் கிடைக்கும். அப் பண்ணைகளில் ஆடுகளையும் மந்தைகளாக வளர்க்கலாம். அவைகளாலும் குடிகளுக்குப் பயன்கள் பல உண்டாகும்.

உழவிற்கும், உணவிற்கும் கால் நடைகளில்லாமல் முடியாது. அதனால்தான் சர்க்காரும் இப் பண்ணைகளை ஆதரிக்கிறார்கள். விவசாய நாடாகிய இங்கு ஒவ்வொரு கிராமத்திலும் இப்பண்ணைகள் இருப்பது அவசியம். கால்நடைகளை வளர்ப்பதற்கு வேண்டிய வசதி இக்காலத்தில் போதாமல் இருக்கிறது. புல்வெளிக்கு எனத் தனிப்பட்ட நிலங்கள் ஒவ்வொரு கிராமத்திலும் ஒதுக்கப்பட வேண்டும். காடுகளிலும், படுகைகளிலும் ஆடு மாடுகள் மேய்வதற்கு இடம் தர வேண்டும். இலை தழைகள் செழித்து வளரக் கூடிய மரங்களைப் புறம்போக்கான இடங்களில் விருத்தி செய்ய வேண்டும். இவ்வசதிகளை அரசாங்கத்தார் செய்து கொடுத்தால் கால் நடைப் பண்ணைகள் நாட்டில் பெருகும்.

| | | |
|---|---|---|
| பெரும்பாலான | புல்வெளி | படுகை |
| கூட்டுறவுப்பண்ணைகள் | மேய்வதற்கு | கால்நடை |
| ஒதுக்கப்பட்ட | செழிப்பாக | பசுக்காத்தல் |
| ஒருவாறு | அம்சம் | பண்ணை |
| கூடியதாக | பசும்பால் | |

### பயிற்சி

முடித்துக் கூறு :—

(1) கால் நடைகள் நமக்கு ..................

(2) எருதுகள் உழவிற்கு ..................

(3) குடியானவர்கள் அநேகமாக ..................

### கேள்விகள்

1. கால்நடை என்பன எவை ?

2. கால்நடைகளை வளர்ப்பதற்கு வேண்டிய வசதிகள் யாவை ?

3. அரசாங்கத்தார் செய்து கொடுக்கக்கூடிய உதவிகள் என்னென்ன ?

## 24. உலோகங்கள்

உலோகங்கள் பலவகைப்படும். இவைகள் யாவும் மூலப் பொருள்கள். இவ்வுலோகப் பொருள்களில் முக்கியமானவை தங்கம், வெள்ளி, இரும்பு, துத்தநாகம், தாமிரம், காரீயம், வெள்ளீயம் முதலியன.

உலோகங்களுக்குத் தனிப்பண்புகள் உண்டு. அவை தனியான பளபளப்பு உடையன ; சாதாரண வெப்ப நிலையில் திடப் பொருளாக இருக்கும் ; தகடாக அடிக்கலாம் ; கம்பியாக நீட்டலாம் ; எளிதில் உடைய மாட்டா ; உருகும் நிலை மிக அதிகம் ; மின்சாரத்தை எளிதில் பரவச் செய்யும்.

உலோகங்கள் எல்லாவற்றிலும் நமக்கு அதிக மாகப் பயன்படுவது இரும்பு. இவ்விரும்பு பல தாதுப் பொருளுடன் கலந்து கிடைக்கிறது. பிறகு இத்தாதுப் பொருள் கரியுடனும் சுண்ணும்புக் கல்லு டனும் சேர்ந்து ஊது உலேயில் போட்டுக் காய்ச்சப் படுகிறது. இவ்வாறு எடுக்கப்பட்ட இரும்புக்கு வார்ப் பிரும்பு என்று பெயர். வார்ப்பிரும்பிலிருக்கும் கரிப் பொருளே எடுத்து விட்டால் தேனிரும்பாகும். எஃகிரும்பில் தேனிரும்பைக் காட்டிலும் அதிகக் கரி இருக்கும்.

வார்ப்பிரும்பால் கிராதிகளும், தேனிரும்பால் லாடம், ஆணி முதலியவைகளும், எஃகிரும்பால் கத்தி, கத்தரிக்கோல் முதலியனவும் செய்யப்படு கின்றன. இவ்விரும்புத் தாதுக்கள் நம் நாட்டில் ஜாம்ஷட்பூர் என்ற இடத்திலும், மைசூரில் பத்ராவதி என்ற இடத்திலும் வெட்டியெடுக்கப்படுகின்றன.

தங்கம் ஸ்படிகச் சிலேகளில் மெல்லிய மஞ்சள் நிறமான நரம்புகள் போல் காணப்படும். இது கல் லுடனும், மணலுடனும் கலந்திருக்கும். இது அமெரிக்காவிலும், ஆஸ்திரேலியாவிலும், ஆப்பிரிக்கா விலும், மைசூரில் கோலார் என்னுமிடத்திலும் கிடைக்கிறது.

தங்கம் சேர்ந்து இருக்கும் பாறைகளே உடைத் துப் பொடி செய்து கலவை முறைகளால் அத்தங்கத் தைத் தனியாகப் பிரித்தெடுக்கிருர்கள். இப்படிப் பட்ட தங்கம் மக்களுக்கு அழகைத் தரும் ஆபரணம் செய்வதற்கு உபயோகப்படுகிறது.

வெள்ளி தனிப் பொருளாகக் கிடைக்கிறது. இது நகைகள், நாணயங்கள் செய்வதற்கும் உபயோகப்

படுகிறது. இது மின்சாரத்தை நன்ருகப் பரவச் செய்யும் பண்புடையது.

துத்தநாகம் பூமியிலிருந்து வெட்டி யெடுக்கப்படு கிறது. இதை ஒருவிதத் தாதுப் பொருளிலிருந்து பிரித்தெடுக்கிருர்கள். பித்தளே உண்டாக்குவதற்குத் துத்தநாகத்தைத் தாமிரத்துடன் கலக்கிருர்கள். துத்த நாகம் பூசப்பட்ட இரும்புத் தகடுகள் துருப்பிடிக்க மாட்டா. இதனுல், வாளிகள், தொட்டிகள், வீடு வேயப்படும் தகடுகள் முதலியன செய்கிருர்கள்.

வெள்ளீயம் வங்கசிலே என்னும் மூலப்பொருளி லிருந்து கிடைக்கிறது. இது மலேயா நாட்டில் கிடைக்கின்றது. இது ஈயம் பூசுவதற்குப் பயன்படு கிறது. வெள்ளீயம் பூசப்பெற்ற இரும்புத் தகட்டிற் குத் தகரம் என்று பெயர்.

காரீயம் ஒரு மிருதுவான உலோகம். இதன் நிறம் நீலங் கலந்த வெளுப்பு. இதனுல் ஆக்கப்பட்ட பொருள்களில் பழரசம், காடி முதலியன வைக்கப் பெற்றிருந்தால் விஷப் பொருள்கள் உண்டாகுமெனக் கூறுகின்றனர். இதனுல் பல நோய்கள் உண்டாகும். இது துப்பாக்கிக் குண்டுகள் செய்வதற்குப் பயன் படுகிறது. பாட்டரித் தகடுகள் செய்வதற்குத் துத்த நாகம் உதவுகிறது.

| | | |
|---|---|---|
| வெப்பநிலே | கலவைமுறை | துருப்பிடிக்க |
| வேயப்படும் | பத்திராவதி | ஸ்படிகம் |
| வார்ப்பிரும்பு | ஆஸ்திரேலியா | அமெரிக்கா |
| மைசூர் | ஆப்பிரிக்கா | கோலார் |
| தாதுக்கள் | | |

### பயிற்சி

தங்கம், இரும்பு, வெள்ளி—இவைகள் ஒவ்வொன்றைப் பற்றியும் மும்மூன்று வாக்கியங்கள் கூறு.

### கேள்விகள்

1. உலோகங்களின் பண்புகள் யாவை?
2. வார்ப்பிரும்பு என்று எதற்குப் பெயர்?
3. தங்கம் கிடைக்கும் நாடுகள் யாவை?
4. எதற்குத் தகரம் என்று பெயர்?
5. இரும்பு நம் நாட்டில் எங்கே எடுக்கப்படுகிறது?

## 25. பல்சுவைப் பாடல்கள்

வாலிபந்தனில் வித்தை கற்கவேண்டும்; கற்ற
    வழியிலே நிற்கவேண்டும்;
வளைகடல் திரிந்து பொருள் தேடவேண்டும்; தேடி
    வளரறஞ் செய்யவேண்டும்;
சீலமுடையோர்களைச் சேரவேண்டும்; பிரிதல்
    செய்யாதிருக்க வேண்டும்;
செந்தமிழ்ப் பாடல் பல கொள்ளவேண்டும்; கொண்டு
    தியாகம் கொடுக்க வேண்டும்;
ஞாலமிசை பலதருமம் நாட்டவேண்டும்; நாட்டி
    நன்ருய் நடத்த வேண்டும்;
நம்பனிணை அடிபூசை பண்ணவேண்டும்; பண்ணி
    னுலு மிகு பக்திவேண்டும்;
ஆலமமர் கண்டனே! பூதியணி முண்டனே,
    அழகன் எமதருமை மதவேள்
அனுதினமும் மனதில் நினை தரு சதுரகிரிவளர்
    அறப்பளீசுவர தேவனே! (1)

—அறப்பளீசுர சதகம்

முன்னமோர் பொய்யுரைக்க
அப்பொய்வெளி யாகாமல்
மூடும் வண்ணம்
பின்னுமோர் பொய்யுரைக்க
அதையும்நிலை நிறுத்திடவோர்
பெரும்பொய் சொல்ல
இன்னவகை கைதவம் ஒன்று
இருநூறு கைதவத்துக்கு
இடமாம் ; வாய்மை
தன்னையே முன்பகரில் சங்கடம்
ஒன்றில்லை, அதுவே
தகைமை நெஞ்சே !

—வேதநாயகம் பிள்ளை

## 26. ஈசுவர சந்திர வித்தியாசாகரர்

நம் இந்திய நாடு பலவளமும் நிறைந்த ஒரு சிறந்த தேசம் ; பல பெரியார்கள் தோன்றிய இடம் ; பற்பல புலவர்கள் பிறந்த நாடு. விஞ்ஞானிகள், அரசியல் தொண்டர்கள், கடவுள் பக்தர்கள் அவதரித்த நன்னாடு. வீரர்கள் நிறைந்த பெருநாடு. நீருக்குத் தட்டில்லாத் தேசம். பல ஆறுகள் இந்நாட்டைச் செழிப்பிக்கின்றன. உலகக்குடி மதிப்பில் ஐந்தில் ஒரு பங்கு உடையது.

இத்தகைப் பெருஞ் சிறப்புற்ற நாட்டின் வட பாலுள்ள வங்காள மாகாணத்தில் மிதுனபுரி என்ற ஊரில் ஈசுவர சந்திர வித்தியாசாகரர் தோன்றினார். இவர் தந்தையின் பெயர் இராமஜெய பானர்ஜி. இவர் பிராமண மரபைச் சேர்ந்தவர் ; மிகவும் எளிய குடும்பத்தில் பிறந்தவர்.

ஆனால், இவரிடத்துப் பொருட்செல்வம் இல்லையே யன்றிக் கல்விச் செல்வம் கங்குகரையின்றிக் காணப் பட்டது. இவர் சம்ஸ்கிருதத்தில் நல்ல பயிற்சியும், சொற்றிறனும், எழுதும் நயமும் ஒருங்கே அமையப் பெற்றிருந்தார். ஆங்கிலத்திலும் நல்ல பயிற்சி உடையவர். தம் பெயரின் பொருளுக்கேற்ப கல்வி



யில் அளப்பருங் கடலாக விளங்கினர். வித்தியா சாகரர் என்ற வடசொல் தொடருக்குக் கல்வியில் கடல்போன்றவர் என்பது பொருளாகும்.

இப்பேரறிஞர் ஒருநாள் இரயில் வண்டித் தொடரில் பிரயாணஞ் செய்து கொண்டிருந்த பொழுது, கல்லூரி மாணவன் ஒருவன் தமக்கு முன் பக்கத்தில் உட்கார்ந்திருக்கக் கண்டார். அறிஞர்

வித்தியாசாகரர் கண்கவர் வனப்பில்லா எளிமையான உடையுடன் இருந்தார். இவரைக் காணவும் கல்லூரி மாணவனுக்குக் கண் கூசியது போலும். ஆகலின், அவன் அவரை நோக்கக்கூட இல்லை. கல்விக் கடலார் அவன் நோக்கத்தை இழுக்க வேண்டுமெனக் கருதினர். அவர் உளநூல் அறிந்தவராகையாலும், கல்லூரி மாணவர்களின் செயல்களைக் கசடறத் தெரிந்தவராகையாலும் சிறிதேனும் உளங் கோணமல் அவனையே உற்று நோக்கிக் கொண்டு வந்தார். மாணவன் புன்முறுவல்பூத்த முகத்தனாய்த் தன்னுடைய அழகில் இவ்வேழை உளஞ் செலுத்தியிருக்கின்றான் என்று கருதி உற்சாகத்துடன் இருந்தான். இருவரும் இராணிகஞ்சு என்ற இடத்தில் இறங்கத் தலைப்பட்டனர்.

அப்பொழுது, கல்லூரி மாணவன் தனது சுமையைத் தூக்கிவரச் சுமையாள் தேடினன்; அருகிலிருந்த ஈசுவரர், தாம் அந்தப் பேழையைத் தூக்கி வருவதாகக் கூறினர். சரியென்று ஒப்புக் கொண்டான் கல்லூரி மாணவன். பேரறிஞர் சுமையாளாக நடந்துவந்து பையன் வீட்டில் பேழையைக் கொண்டு வந்து சேர்த்தார். பையன் சுமைக் கூலியைக் கொடுக்கச் சென்றான். அதனைப் பெற்றுக்கொள்ள மறுத்துவிட்டுத் தாம் செல்லவேண்டிய இடத்திற்குச் சென்றார்.

அன்றிரவு ஈசுவரர் அவ்வூரில் சொற்பொழிவாற்றினர். அக்கூட்டத்திற்குக் கல்லூரி மாணவனும் வந்திருந்தான். இவர் பிரசங்கத்தைக் கேட்டு வியப்புற்று, 'என்ன! இத்தகைப் பேரறிஞரா என்னுடைய பேழையைச் சுமந்து வந்தவர்! ஆ! என்ன

அடாத செயலுக்கு ஆளானேன்! எப்படியேனும் யான் அவர் அன்பைப் பெறவேண்டும்' என்று கருதிப் பிரசங்கம் முடியுங்காறும் காத்திருந்து அவரைக் கண்டான். அவரும் இவனே இன்னவன் என்று அறிந்தார். அப்பொழுது பையன் அவருடைய காலில் விழுந்து வணங்கி "நான் செய்த பிழையைப் பொறுத்தருள்க" என்று வேண்டி நின்றான். ஆன்றோர் சினம் "நீர்கிழிய எய்த வடுப்போல மாறும் தன்மையது". ஆதலின், உடனே பையன்மீது மகிழ்ச்சி கொண்டு தனக்கு வேண்டிய காரியங்களைத் தானே செய்துகொள்வதில் இழிவில்லை என்றும், உருவைக் கண்டு எவரையும் தாழ்வாக எண்ணக் கூடாது என்றும் பலவாறாக அறிவுரை கூறினார். பையனும் அவர் உத்தரவு பெற்றுத் தன்னில்லம் போய்ச் சேர்ந்தான். அன்றுமுதல் பையன் தனக்குள்ள செருக்கு நீங்கப் பெற்று அடக்கம் உடையவன் ஆனான்.

| | |
|---|---|
| அவதரித்த | வித்தியாசாகரர் |
| தட்டில்லாத | பேரறிஞர் |
| குடிமதிப்பில் | வனப்பில்லா |
| பெருஞ்சிறப்பு | உளங்கோணு |
| கங்குகரை | சொற்பொழிவு |
| ஆற்றுதல் | முடியுங்காறும் |

## கேள்விகள்

1. இந்திய நாட்டின் வளத்தைப் பற்றிக் கூறுக.
2. வித்தியாசாகரர் எம்மொழிகளில் வல்லுநர்?
3. வித்தியா சாகரர் என்ற தொடரின் பொருள் யாது?
4. கல்லூரி மாணவன் எவ்வாறு கருவம் நீங்கப் பெற்றான்?

# 27. கடிதங்கள்

கடிதம் ஐந்து பிரிவுகளை யுடையது. முதலாவதாக, கடிதத்தின் இடப்பக்கத்தில் கடிதம்பெறுகின்றவரை அழைக்கும் முறை. இரண்டாவதாக வலப் பக்கத்தின் ஓரத்தில் கடிதம் எங்கிருந்து வருகின்றதென்பதையும் எழுதும் தேதியையும் குறிப்பிட வேண்டும். மூன்றாவதாக எழுதும் விஷயம். நான்காவதாகத் தொடர்பு முறை. ஐந்தாவதாகக் கடிதம் பெறுகின்றவரின் விலாசம் அல்லது முகவரி.

## மாணவன் ஆசிரியருக்கு எழுதும் ஓய்வுக் கடிதம்

3, கீழ் ஆண்டார் வீதி,
திருச்சிராப்பள்ளி,
23—10—50.

அன்புமிக்க ஆசிரியர் அவர்களுக்கு வணக்கம் பல.

என் தமக்கை மங்கையர்க்கரசிக்கு 27–10–1950 ஆம் நாள் வெள்ளிக்கிழமை மதுரையில் திருமணம் நடைபெறும். ஆகையால், எனக்கு 23–10–50 முதல் ஒரு வாரம் வரை ஓய்வு கொடுக்கக் கேட்டுக் கொள்கிறேன்.

இங்ஙனம்,
தங்கள் பணிவு மிக்க,
**திருநாவுக்கரசன்.**

**முகவரி :—**

நான்காம் வகுப்பு A-பிரிவு ஆசிரியர்
அவர்களுக்கு,
இ. எ. பாடசாலை,
ஆண்டார் வீதி, திருச்சிராப்பள்ளி.

## தந்தையாருக்கு எழுதும் கடிதம்

9, மேலச்சிந்தாமணி,
நடுத்தெரு,
திருச்சிராப்பள்ளி,
26–10–50.

அன்பார்ந்த தந்தையீர்,

தங்கள் திருவடிக்குப் பெரு வணக்கம்.

நான் இங்கே நலமாயிருக்கின்றேன். அங்கேயுள்ள நம்மவர் நலத்தை அறிய ஆவல் உறுகின்றேன்.

நான் இந்த ஆண்டு மூன்றும் வகுப்பிலிருந்து நான்காம் வகுப்புக்குத் தேறியிருக்கின்றேன். என் வகுப்பு ஆசிரியர் நான்காம் வகுப்புக்கு வேண்டிய புத்தகங்களும் நோட்டுக்களும் வாங்க ஐந்து ரூபாய் ஆகுமென்று சொல்லுகிருர். எங்கள் பள்ளியிலேயே புத்தகக் கடை வைக்கப்பட்டிருக்கிறது. தாங்கள் தயை கூர்ந்து ஐந்து ரூபாய் மணியார்டர் மூலமாக அனுப்பும்படி பணிவுடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இங்ஙனம்,
தங்கள் கீழ்ப்படிதலுள்ள,
**சுந்தரமூர்த்தி.**

**முகவரி :—**

இரா. சிதம்பரம் பிள்ளை,
கோட்டை மேடு,
தொட்டியம் போஸ்டு,
முசிரித் தாலுகா.

| | |
|---|---|
| பிரிவுகள் | தமக்கை |
| இடப் பக்கம் | பணிவு மிக்க |
| தொடர்பு முறை | திருமணம் |
| முகவரி | குறிப்பிடவேண்டும் |
| ஓய்வுக் கடிதம் | பெறுகின்றவர் |

**கேள்விகள்**

1. உன் மாமன் வீட்டில் நடக்கும் காதணி விழாவுக்குச் செல்ல உன் ஆசிரியரை இரண்டு நாள் விடுமுறை பெறவேண்டி கடிதம் எழுதுக.

2. துணி வாங்குவதற்குப் பணம் அனுப்பும்படி உன் அண்ணனுக்குக் கடிதம் எழுதுக.

# 28. நல்ல மகன்

## காட்சி 1

(செஞ்சிக் கோட்டை - அரண்மனை - காலை நேரம்.)

**மகன் :** அம்மா, என் அப்பா யார்? அவர் எங்கே இருக்கிறார்? பிறந்ததிலிருந்து நான் அவரைப் பார்க்கவே இல்லையே.

**தாய் :** குழந்தாய், உன் அப்பா உயிரோடு சிறையில் இருக்கிறார்.

**மகன் :** சிறையிலா? சிறையிலா? எந்தச் சிறையில்? சிறை செய்தவன் யார்?

**தாய் :** அவர் டில்லிச் சிறையில் இருக்கிறார். ஷாஆலம் பாதுஷா அவரைச் சிறையில் வைத்திருக்கிறார்.

**மகன் :** அவரைச் சிறையில் விட்டு விட்டு, நான் இங்கே இருப்பேனா? அவர் சிறைபுக என்ன காரணம்?

**தாய்:** அவர் எவர்க்கும் ஒரு குற்றமும் செய்ய வில்லை. போரில் எவரிடமும் தோல்வி பெறவில்லை. டில்லி பாதுஷாவிடம் ஒரு பொல்லாத குதிரை இருக்கிறது. அது அடங்காப் புரவி. அதை அடக்குவ தாகப் பற்பலர் வீரம் பேசிச் சென்றுர்கள். அதைப் பிடித்து நிறுத்தவும் ஒருவராலும் முடியவில்லை. அப் பந்தயத்தில் எல்லோரும் தோற்றுப் போனுர்கள். அவர்களை யெல்லாம் பாதுஷா சிறையில் வைத்திருக்கிருர். அவ்வாறு சிறை சென்றவர்களுள் உன் தகப்பனுரும் ஒருவர்.

**மகன்:** இவ்வளவுதானு? அம்மா, விடைதருக; பொல்லாக் குதிரையை நான் நல்ல குதிரையாகச் செய்து, தந்தையை அழைத்துக்கொண்டு வருகிறேன்.

## காட்சி 2

(பாதுஷாவின் அரண்மனை - மாலைநேரம்)

**தேசிங்கு:** சலாம். மாட்சி பெற்ற பாதுஷாவே! பணிவுடன் வணங்குகிறேன். தரணிசிங்கின் வீர மகன் அடியேன். தேசிங்கு என்பது என்பெயர்.

**பாதுஷா:** இளைஞ, எங்கு வந்தாய்? நீ வேண்டுவது யாது?

**தேசிங்கு:** பாராஹறசாரியை அடக்க வந்தேன். தயவு செய்து கட்டளை இடுக.

**பாதுஷா:** சிறுவ, மிகப் பொல்லாக் குதிரை அது. பெரிய பெரிய வீரர்கள் அதை அடக்க முடியாமல் தோல்வி உற்றுர்கள். நீ அதன் மேல் ஏற முடியுமா? அதன் அருகிலும் நீ செல்வாயா? உட்

கார்ந்தாலும் உன்னை அது விடுமா? எங்கேயாவது கொண்டு போய்த் தள்ளிவிட்டால்......?

**தேசிங்கு :** அச்சம் என்பது எனக்கு இல்லை. குலப் பெருமையைக் காப்பது என் கடமை. தந்தை சிறையில் இருப்பது எனக்கு அவமானம். பாராஹ சாரியைப் பழகிய நாய்போல் நிற்கச் செய்வேன். பந்தயத்தை முடிப்பேன். பாதுஷாவை மகிழ் விப்பேன்.

## காட்சி 3

(பந்தய மைதானம்—திரளான கூட்டம்)

**ஜனங்கள் :** இளங் கன்று பயம் அறியாது என்பார்கள். பாதுஷாவும் ஏமாந்து போனரோ? இளைஞன் கதி என்ன ஆகும்?

**வீரர் :** உருவத்தைக் கண்டு நாம் பேசக் கூடாது. புலிக்குப் பிறந்தது பூனை ஆகுமா? சிறுவன் வெற்றி பெறுவான். பந்தயமும் இன்று முடிவு பெறும்.

**ஜனங்கள் :** ஜே! தேசிங்கு. ஜே! என்ன ஆச்சரியம்! பெரிய பெரிய வீரர்கள் எல்லாம் தோல்வி உற்றனர்கள். இளைஞன் தேசிங்கு ஜெயம் பெற்றன். இவன் அல்லவோ வீரமகன்! அடங்காப் புரவி அடங்கி விட்டதே! நாய்போல் நிற்கின்றதே. இவனுடைய பெற்றோர்கள் எவ்வளவு புண்ணியம் செய்தவர்கள்! தரணிசிங்கும், மற்றவர்களும் விடுதலை பெறுவார்கள்; இன்று ஒரு நன்னாள். டில்லி நகர் எங்கும் இன்று கொண்டாட்டந்தான்.

**பாதுஷா :** வீரத் தேசிங்கு, நீயே நல்ல மகன். குலக் கொழுந்து நீயே. தோல்வியுற்ற வீரர்கள் அனைவரும் விடுதலை பெற்றனர். பாராஹ சாரியைப் பற்றி இருந்த என் கவலையும் ஒழிந்தது.

பாராஹசாரியை உனக்கே பரிசாக அளிக்கிறேன். செஞ்சி மன்னர் இன்று முதல் சுயேச்சை அரசர். தந்தையாரும் நீயும் செஞ்சிக்குச் சென்று நன்று வாழ்க. தாயை வணங்கி இன்பம் பெறுவாயாக. டில்லி நகர் இன்று பிரகாசமாக விளங்கும்.

| | | |
|---|---|---|
| கட்டளை | கதி | குலக் கொழுந்து |
| சிறை | பாதுஷா | பொல்லாக் குதிரை |
| பரிசு | விடுதலை | பிரகாசமாக |
| புக | கவலை | சுயேச்சை |
| புரவி | நன்னாள் | வீரமகன் |
| அச்சம் | புண்ணியம் | இளங் கன்று |
| கடமை | அவமானம் | பாக்கியம் |
| விடுதலை | ஆச்சரியம் | தயவு செய்து |

அதிவீர ராம பாண்டியன்

அருளிச்செய்த

# 29. வெற்றிவேற்கை

## அழகு

1. எழுத்தறி வித்தவன் இறைவன் ஆகும்.
2. கல்விக் கழகு கசடற மொழிதல்.
3. செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல்.
4. மன்னர்க் கழகு செங்கோல் முறைமை.
5. மந்திரிக் கழகு வரும்பொருள் உரைத்தல்.
6. தந்திரிக் கழகு தருகண் ஆண்மை.
7. உண்டிக் கழகு விருந்தோ டுண்ணல்.
8. பெண்டிர்க் கழகெதிர் பேசா திருத்தல்.
9. அறிவோர்க் கழகு கற்றுணர்ந் தடங்கல்.
10. வறியோர்க் கழகு வறுமையிற் செம்மை.

## பனை

11. தேம்படு பனையின் திரள் பழத் தொரு விதை
வானுற ஓங்கி வளம்பெற வளரினும்
ஒருவர்க் கிருக்க நிழலாகாதே.

## ஆல்

12. தெள்ளிய ஆலின் சிறுபழத் தொரு விதை
தெண்ணீர்க் கயத்துச் சிறுமீன் சினையினும்
நுண்ணிதே ஆயினும், அண்ணல் யானை
அணிதேர் புரவி ஆட்பெரும் படையொடு
மன்னர்க் கிருக்க நிழலா கும்மே.

## பெரியோர் சிறியோர் பிள்ளைகள்

13. பெரியோ ரெல்லரம் பெரியரும் அல்லர்.
14. சிறியோ ரெல்லாம் சிறியரும் அல்லர்.
15. பெற்ருே ரெல்லாம் பிள்ளைகள் அல்லர்.

## மாருதவை

16. அடினும் ஆவின்பால் தன் சுவை குன்ருது.
17. சுடினும் செம்பொன் தன்ெளி கெடாது.
18. அரைக்கினும் சந்தனம் தன் மணம் அருது.
19. புகைக்கினும் காழ் அகில் பொல்லாங்கு கமழாது.
20. கலக்கினும் தண் கடல் சேருகாது.

## நட்பு

21. ஒருநாள் பழகினும் பெரியோர் கேண்மை
இரு நிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே.
22. நூருண்டு பழகினும் மூர்க்கர் கேண்மை
நீர்க்குள் பாசிபோல் வேர்க்கொள் ளாதே.

## பெருமை

23. பெருமையும் சிறுமையும் தான்தர வருமே.

## பிழைபொறுத்தல்

24. சிறியோர் செய்த சிறுபிழை யெல்லாம்
பெரியோராயின் பொறுப்பது கடனே.
25. சிறியோர் பெரும்பிழை செய்தனராயின்
பெரியேரர் அப்பிழை பொறுத்தலும் அரிதே.

## கல்வி

26. கற்கை நன்றே ; கற்கை நன்றே ;
பிச்சை புகினும் கற்கை நன்றே.
27. கல்லா ஒருவன் குலநலம் பேசுதல்
நெல்லினுட் பிறந்த பதராகும்மே.

28. நாற்பால் குலத்தில் மேற்பால் ஒருவன்
கற்றிலன் ஆயின் கீழிருப்பவனே.
29. எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும்
அக்குடியில் கற்றோரை மேல் வருக வென்பர்.
30. அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும்.

## இல்லை

31. யானைக் கில்லை தானமும் தருமமும்.
32. பூனைக்கில்லை தவமும் தயையும்.
33. ஞானிக் கில்லை இன்பமும் துன்பமும்.
34. சிதலைக் கில்லை செல்வமும் செருக்கும்.
35. முதலைக் கில்லை நீத்தும் நிலையும்,
36. அச்சமும் நாணமும் அறிவிலோர்க் கில்லை.
37. நாளும் கிழமையும் நலிந்தோர்க் கில்லை.
38. கேளுங் கிளையும் கெட்டோர்க் கில்லை.

## நிலையாதவை

39. உடைமையும் வறுமையும் ஒரு வழி நில்லா.
40. குடைநிழ லிருந்து குஞ்சரம் ஊர்ந்தோர்
நடை மெலிந் தோரூர் நண்ணினும் நண்ணுவர்
41. சிறப்பும் செல்வமும் பெருமையும் உடையோர்
அறக்கூழ்ச் சாலை அடையினும் அடைவர்.
42. அறத்திடு பிச்சை கூவி இரப்போர்
அரசோ டிருந்தர சாளினும் ஆளுவர்.
43. குன்றத் தனையிரு நிதியைப் படைத்தோர்
அன்றைப் பகலே அழியினும் அழிவர்.
44. எழுநிலை மாடம் கால்சாய்ந் துக்குக்
கழுதை மேய்பாழ் ஆயினும் ஆகும்.

## இயல்பு

45. இல்லோர் இரப்பதும் இயல்பே இயல்பே.
46. இரந்தோர்க் கீவதும் உடையோர் கடனே.
47. தறுகண் யானை தான்பெரி தாயினும்
சிறுகண் மூங்கிற் கோற்கஞ் சும்மே.

## நன்று

48. கொடுங்கோல் மன்னர் வாழும் நாட்டின்
கடும்புலி வாழும் காடு நன்றே.
49. சான்றோர் இல்லாத் தொல்பதி இருத்தலின்
தேன் தேர் குறவர் தேயம் நன்றே.

---

# சுதந்திர மணி வாசகம்

## ஐந்தாம் புத்தகம்

ஆக்கியோர் :
வித்துவான் க. முருகேசன்,
தலைமைத் தமிழாசிரியர்,
அர்ச். மரியன்னை உயர்நிலைப்பள்ளி, திண்டுக்கல்




பழனி & கோ பதிப்பகம்
தெப்பக்குளம் : : திருச்சிராப்பள்ளி

# முகவுரை

'சுதந்திர மணி வாசகம்' என்னும் பெயர் புனைந்து வெளிவரும் இப்புத்தகங்கள் வகுப்பு அநுபவமும், புலமையும் உடைய ஆசிரியரால் தொகுக்கப் பெற்றவை. பொருள்கள் கால நிலையைத் தழுவியும், வகுப்பிற் கேற்ற வாறும், சுருங்கச் சொல்லல், நன்மொழி புணர்த்தல், நயம்பட வுரைத்தல் என்ற அமைப்புக்களைத் தழுவியும் சேர்க்கப் பெற்றுள. முரண்பாடான கொள்கைகளும், காலத்திற்குப் பொருந்தாதனவும், வாழ்க்கையில் பயன் படாதனவும் இப்புத்தகங்களில் இடம் பெறவில்லை. வாசகங்கள் முன் வகுப்போடு தொடர்ச்சியுள்ள முறையில் (Concentric System) படிப்படியாக வாசிக்கும் பயிற்சியைக் கொடுப்பனவாகவும், மொழிப் பயிற்சியில் தேர்ச்சியை யளிப்பனவாகவும், கருத்துக்களை வெளியிடுவனவாகவும் யாக்கப்பட்டுள. இப்புத்தகங்கள் யாவராலும் ஏற்கப் பெற்று சிறுவர் சிறுமியர் பயன்பெற வேண்டுமென்பதே எங்கள் அவா.

பதிப்பகத்தார்

# பொருளடக்கம்

# சுதந்திர மணி வாசகம்

## ஐந்தாம் புத்தகம்



## 1. தமிழ்மொழி வாழ்த்து

1. வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ்மொழி
வாழிய வாழிய வே.

2. வான மளந்த தனைத்தும் அளந்திடு
வண்மொழி வாழிய வே.

3. ஏழ்கடல் வைப்பினும் தன்மணம் வீசி
இசைகொண்டு வாழிய வே.

4. எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ் மொழி
என்றென்றும் வாழிய வே.

5. சூழ்கலி நீங்கத் தமிழ்மொழி யோங்கத்
துலங்குக வையக மே.

6. தொல்லை வினைதரு தொல்லை யகன்று
சுடர்க தமிழ்நா டே.

7. வாழ்க தமிழ்மொழி வாழ்க தமிழ்மொழி
வாழ்க தமிழ்மொழி யே.

8. வானம் அறிந்த தனைத்தும் அறிந்து
வளர்மொழி வாழிய வே.

—மகாகவி பாரதியார்

## 2. நமது தேசம்

நாம் வசிக்கும் தேசத்திற்கு இந்தியா என்று பெயர். இந்தியா மிகப் பரந்த தேசம். ஆகையால் இதனைக் கண்டம் என்றும் கூறலாம். வெகு காலத்திற்கு முன்னே பரதன் என்ற ஓர் அரசன் இந்தியா முழுமையும் ஆண்டு வந்தான். அவன் மிகவும் புகழ் பெற்று விளங்கினான். ஆகையால் பரத கண்டம் என்ற பெயர் இந்தியாவிற்கு வழங்கலாயிற்று. நாட்டைப் பெண்பால் தெய்வமாக வணங்குவது நம் முன்னோரின் வழக்கம். ஆகையால் இந்தியாவை இந்தியத் தாய், அல்லது பாரதமாதா என்று நாம் போற்றுகிறோம். நாமெல்லோரும் இந்தியத்தாய் அதாவது பாரத மாதாவின் மக்கள். நமக்கு இந்தியர் அல்லது பாரத மக்கள் என்று பெயர்.

வடக்கில் இமயமலைத் தொடரும், மற்ற மூன்று பக்கங்களிலும் கடலும் இந்தியாவின் எல்லைகளாக விளங்குகின்றன. இமயமலையின் நடுவே உள்ள சிகரங்கள் இந்தியத் தாய்க்குச் சிரம் போலவும், அம்மலைத் தொடர்கள் ஒருமாலை போலவும், குமரி முனையே பாதங்கள் போலவும், மூன்று பக்கமும் உள்ள கடல்கள் ஆடைபோலவும் அழகாகத் தோற்றம் அளிக்கின்றன.

இந்தியாவின் நடுவில் விந்தியமலை கிழக்கு மேற்காகப் பரவி இருக்கின்றது. அம்மலை இந்தியாவின் நிலப்பகுதியை இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கின்றது. விந்தியமலைக்கு வடக்கிலுள்ள பாகம் வட இந்தியா அல்லது இந்துஸ்தானம் என்றும்,

தெற்கிலுள்ள பாகம் தென்னிந்தியா அல்லது திராவிட நாடு என்றும் வழங்கப்படும்.

பண்டைக் காலத்தில் இந்தியாவானது ஐம்பத்தாறு நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அந்நாடுகளை ஐம்பத்தாறு மன்னர்கள் தனித்தனியே ஆண்டு வந்தார்கள். இப்போது இந்தியா ஒரு பெரிய குடியரசு நாடாகியுள்ளது. வட இந்தியாவில் சில பகுதிகள் பாகிஸ்தானம் என்ற பெயருடன் தனி நாடாகியுள்ளன. வட இந்தியாவின் ஏனைய பகுதிகளும், தென்னிந்தியாவும் இந்தியக் குடியரசு என்ற பெயரால் ஆட்சி செய்யப்படுகின்றன. இரு அரசாங்கத்தாரும் சேர்ந்து இந்தியாவின் பொதுப் பெருமையைக் காத்துச் சிறப்பாக விளங்குகிறார்கள். இந்திய அரசாங்கத்தாருக்குத் தலைநகரம் டில்லி. அது புது டில்லி என்று வழங்கப்படும். பழைய டில்லி என்பது இந்தியாவின் பண்டைத் தலைநகர். இந்திய அரசாங்கம் பல ராஜ்யங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது; அவற்றுள் நாம் வசிப்பது சென்னை ராஜ்யம்.

இமயமலைகளில் கங்கை, சிந்து, பிரம்மபுத்திரா முதலிய பேராறுகள் தோன்றி, வடஇந்தியாவின் சமவெளிகளில் பாய்கின்றன. அவ்வாறுகளின் நீர்வளத்தால் வடஇந்தியா நல்ல செழிப்பை அடைகின்றது.

மேற்குத் தொடர்ச்சிமலைகளும், கிழக்குத் தொடர்ச்சிமலைகளும் தென்னிந்தியாவிலுள்ள பெரிய மலைகள். கோதாவரி, கிருஷ்ணை, நர்மதை, தப்தி, காவிரி, வடபெண்ணை, தென்பெண்ணை, பாலாறு,

வைகை, தாமிரவர்ணி என்பன தென்னிந்தியாவில் உள்ள முக்கிய நதிகள். இவற்றால் தென்னிந்தியா நல்ல செழிப்பை அடைகின்றது.

தெலுங்கு நாடு அல்லது ஆந்திரநாடு, கன்னட நாடு, மலையாள நாடு, தமிழ்நாடு என்பன திராவிட நாட்டின் பகுதிகள். தெலுங்கு, கன்னடம், மலையாளம், தமிழ் என்பன திராவிடமொழிகள் எனப்படும். இம் மொழிகளைத் தாய்மொழியாக உடையவர்கள் திரா விடர்கள் ஆவர்.

இந்தியா பழம்பெருமை வாய்ந்தது; கல்விமான் களும் வீரர்களும் உடையது; மிகப் பழங்காலத்தி லிருந்தே நாகரிகத்திற் சிறந்தது. இந்நாட்டில் விவ சாயம் மிக்கு நடைபெறுகின்றது. தொழில்களுக்கு வேண்டிய வசதிகள் எல்லாம் நமது தேசத்தில் அமைந் திருக்கின்றன. வர்த்தகத்திலும் நமது தேசம் ஆதி காலத்திலிருந்தே நல்ல பழக்கம் உடையது.

இந்தியர்களாகிய நாம் எல்லோரும் ஓர் இனம். நாம் எல்லோரும் ஒற்றுமையாக வாழவேண்டும்; இந்தியாவின் பெருமையை விளங்கச் செய்ய வேண்டும்.

| | | |
|---|---|---|
| பெண்பால் தெய்வம் | எல்லை | இந்துஸ்தானம் |
| இந்தியத்தாய் | சிகரம் | திராவிடம் |
| பாரதமாதா | சிரம் | பண்டைக் காலம் |
| குடியரசு | ஏனைய | தனித்தனியே |
| பொதுப் பெருமை | ராஜ்யம் | தலைநகரம் |
| சமவெளி | பகுதி | கல்விமான் |
| பழங்காலம் | வசதி | ஆதிகாலம் |

**கேள்விகள்**

1. பரதகண்டம் என்ற பெயர் எவ்வாறு ஏற்பட்டது?

2. இந்துஸ்தானம் என்ற பகுதி எது? திராவிடநாடு என்ற பகுதி எது?

3. இந்தியாவின் இயற்கை அமைப்பின் அழகை விவரி.

4. இந்தியாவிலுள்ள இரண்டு தனி அரசாங்கங்கள் யாவை?

5. நாம் எவ்வாறு வாழவேண்டும்?

# 3. பாரத நாடு

வெள்ளி மலையும் வடக்காக—விரி
வெற்புடைச் சிங்களம் தெற்காக
பள்ளக் கடலடி வங்காளம்—கீழ்ப்
பாரிசம் மேற்கில் அரபிக்கடல்.
பரந்து கிடக்கின்ற தேசமடி—எம்மைப்
பாலிக்கும் இந்திய தேவியடி;
சிறந்து விளங்கிய தேசமடி—அவள்
சீரும் சிறப்பையும் கேளுங்கடி.
எந்தக் குலத்திற் பிறந்தாலும்—அவர்
எந்த நிலையில் இருந்தாலும்,
இந்த நிலத்திற் பிறந்தவர் எல்லோரும்
இந்தியத் தேவியின் மக்களடி.

—வே. இராமலிங்கம் பிள்ளை



## 4. வழிப்போக்கனும் ஆலம்பழமும்

ஒரு நாள் ஒரு வழிப்போக்கன் ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்குப் போய்க்கொண்டிருந்தான். போகும் வழியில் சாலையின் இரு பக்கங்களிலும், நிழல் தரும் மரங்கள் பல நெடுக இருந்தன. நேரம் செல்லச் செல்ல வெய்யிலின் வெப்பம் அதிகமாகிக் கொண்டே வந்தது. சாலையின் வழியே நடந்து கொண்டிருந்த அவ் வழிப்போக்கன் சிறிது நேரம் இளைப்பாற விரும்பினான். அவன் ஓர் ஆலமரத்தின் அடியில் தங்கினான்.

அம்மரத்தின்கீழ் பரந்து விளங்கிய நிழல் அவனுக்கு மிக்க இன்பத்தைக் கொடுத்தது. ஆங்கு அவன் தரையின்மேல் ஒரு துணியை விரித்துப் படுத்துக்கொண்டான். படுத்திருந்தபடியே அவன்

அண்ணுந்து பார்த்துக்கொண்டு பற்பலவாறு சிந்தித்துக் கொண்டிருந்தான். அம் மரத்தின் கிளைகள் நாலா பக்கங்களிலும் படர்ந்திருந்தன; அக் கிளைகளிலிருந்து ஆங்காங்கு விழுதுகள் தொங்கிக்கொண்டிருந்தன. அவ் விழுதுகளில் பல பூமிக்குள் இறங்கி, வேரூன்றிப் பருத்து அடிமரம் போன்றே ஆயின. கிளைகளில் தழைத்திருந்த பெரிய இலைகள் கூரை வேய்ந்ததுபோல் அழகாகத் தோன்றின. இடையிடையே காணப்பட்ட செந் நிறமும், சிறிய உருவமும் உடைய ஆலம் பழங்கள் கண்ணிற்கு இனிய காட்சி அளித்தன. நூற்றுக் கணக்கான காகங்களும் கிளிகளும் அப் பழங்களைத் தின்றுகொண்டு அம் மரத்தின் கிளைகளில் அமர்ந் திருந்தன.

அத் தோற்றத்தைக் கண்ட வழிப்போக்கன் இயற்கையின் சிறப்பையும், இயற்கையை ஆக்கிய கடவுளின் மகிமையையும் எண்ணி எண்ணி ஆனந் தித்தான். என்றாலும், "பூசனிக்கொடியில் மிகப் பெரிய காய்கள் உண்டாகின்றனவே! பெரிய வடிவினையுடைய ஆலமரத்தில் வேப்பங்கனியின் அளவை ஒத்தனவாகிய சிறிய பழங்களைப் படைத்தது கடவுளுக்கு 'அறிவுடைமையாகுமோ?" எனத் தன் மனத்திற்குள் எண்ணினான். அவ்வாறு எண்ணிக் கொண்டே அவன், தான் படுத்தபடியே நித்திரை செய்துவிட்டான்.

அவன் நித்திரை செய்து கொண்டிருக்கையில், ஓர் ஆலம் பழம் அவனுடைய நெற்றியின்மேல் விழுந்தது. பழம் விழுந்த உணர்ச்சியால், அவன்

